# வந்தனம்! நீங்கள் லைப்பாய் தேகாப்பியாசம் செய்தீர்களா?

உங்கள் ஆரோக்கியத்தைப் பாதுகாத்துக் கொள்ளுங்கள் — அது வாழ்க்கையின் மிக அரிய பொக்கிஷம். சுறுசுறுப்பும், தீட்சண்யமும் கொண்ட புத்தி ஏற்பட பூரண ஆரோக்கியம் அவசியம் என்பதை மறக்காதீர்கள். திட்டப்படி தவறாமல் தேகப்பயிற்சி செய்வது. சாதாரண சத்துள்ள உணவை உட்கொள்வது. சரீர சுத்தத்தை பாதுகாப்பது — இவையே உடல் வலிமையை வளர்த்துவதற்கு முக்கியமாகச் செய்ய வேண்டியவைகள். லைப்பாய் உங்களுக்கு சரீர சுத்தத்தைத் தரும் சோப்பு. அதில் கலந்துள்ள சுகாதாரப் பொருளின் சக்தியால் உங்கள் உடலை நோய்களிலிருந்து காப்பாற்றவும் உதவுகிறது.







லைப்பாய் தேகப்பயிற்சிப் படங்களுக்கு Dept. C412 P.O. Box 758, Bombay, 1 என்ற விலாசத்திற்கு இரண்டணா ஸ்டாம்பு அனுப்புங்கள்.




## லைப்பாய் சோப்புடன் துவக்கும் நாளே நன்னாள்

L. 94-23 TM.

LEVER BROTHERS (INDIA) LIMITED

# கல்கி

## பொருளடக்கம்

ர் 7 }
தழ் 4 }

ஆகஸ்ட் 24

{ சர்வசித்து
{ ஆவணி 8



"கல்கி"யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்களும், சம்பவங்களும் கற்பனை.



No. 3.

# கிரைப் ஸிரப்



கிரைப் ஸிரப் குழந்தைகளுக்கேற்ற சிறந்த பேதி மருந்து. வயிற்றுக் கோளாறென்ற சந்தேகமிருந்தால் ஒரு டோஸ் கிரைப் ஸிரப் கொடுங்கள்.

ஒரு  தயாரிப்பு

அழுகை
மாறி
புன்னகை

தயாரிப்பவர்கள் :

**மைசூர் இண்டஸ்ட்ரியல் அண்டு டெஸ்டிங் லாபரடெரி லிமிடெட்**

மல்லேஸ்வரம், பெங்களூர்

விற்பனை ஏஜண்டுகள் :

**மெஸர்ஸ். பெஸ்ட் அண்டு கம்பெனி லிமிடெட்**

தபால் பெட்டி நெ. 63, மதராஸ்










செய்திகளை முந்தித் தருகிற தினப் பத்திரிகைகள்

**தினத்-தாள்** சேலம் & கோயமுத்தூர்

**தந்தி** — மதுரை —

விவரங்களுக்கு :
'தந்தி' & 'தினத்தாள்' ஆபீஸ், பிராட்வே, சென்னை




மலர் 7 | தமிழ்த் திருநாடு தன்னைப் பெற்ற தாயென்று கும்பிடடி பாப்பா —பாரதியார் | இதழ் 4

# என்ன சேதி?

## கூடை நிறைந்தது!

ஆமாம்; சர்க்கார் காரியாலயத்தின் ப்பைக் கூடை நிறைந்து விட்டது! நிறைந்து வழிந்து கொண்டும் இருக்கிறது! யினும் அக் கூடையில் பட்டங்கள் வந்து ழுவது நின்றபாடில்லை. ராவ் சாகிப், ராவ்பகதூர், திவான் பகதூர் பட்டங்கள் திமுதிமு வென்று மேலும் மேலும் வந்து ழுந்து கொண்டேயிருக்கின்றன!

அடாடா! அடாடாடாடா! இந்தப் பட்டங்களுக்கு வந்த கதியைத்தான் என்னவென்று சொல்வது? ஒரு காலத்தில் த்தம வைதிக குலத்தில் பிறந்த ஷிக் ஞுக்கள் 'ராவ் சாகிப்' ஆவதற்கு என்ன பாடு பட்டார்கள்? ராவ் பகதூர், திவான் பகதூர் பட்டங்களுக்காக எத்தனை ரூபாய் செலவழித்தார்கள்? ஸர் பட்டம் பெறுவதற்காக ஆத்மாவையே விற்று விடவும் தயாராய் இருந்த காலத்தை நாம் பார்த்திருக்கிறோமே? அவ்விதம் அரும்பாடு பட்டுக் கிடைத்த பட்டங்களை இப்போது அவசர அவசரமாக விட்டுத் தொலைப்பதோடு ல்லாமல், அந்தச் செய்தியைப் பத்திரிகைகளுக்கும் அனுப்பிவைக்கிறார்கள்! எதற்காகவோ, ஆண்டவனுக்குத்தான் தெரியும்!

பட்டத்தைத் துறப்பது என்பது ஒரு காலத்தில் அபூர்வமான வீரச் செயலாகவும் தியாகமாகவும் இருந்தது. டாக்டர் பெஸண்டு அம்மையைக் காவலில் வைத்ததும் மாஜி நீதிபதி சுப்பிரமணிய ஐயர் 'ஸர்' பட்டத்தை உதறி எறிந்தார். பஞ்சாப் படுகொலையைப் பற்றி அறிந்ததும் டாக்டர் ரவீந்திரநாத் டாகுர் 'ஸர்' பட்டத்தை வீசி எறிந்தார். ஸ்ரீ எஸ். சீனிவாசய்யங்கார், ஸி. ஐ. இ. பட்டத்தைத் துறந்தார். அதற்கெல்லாம் அந்நாளில் அர்த்தம் இருந்தது; பலனும் இருந்தது. இப்போது பட்டங்களை விட்டேன் என்று சொல்வதில் யாதொரு பொருளும் இல்லை. பட்டதாரிகள் பட்டங்களை விடாவிட்டால், பட்டங்கள் தான் அவர்களை விட்டுப் போவது நிச்சயமாயிற்றே! "பிரிட்டிஷ் சர்க்காரின் பட்டங்களை அங்கீகரிக்க மாட்டோம்" என்று சுதந்திர சர்க்கார் சொன்ன பிறகு, பட்டங்களை விட்டால் என்ன? விடாவிட்டால் என்ன?

## வருந்துகிறோம்

திருவாங்கூர் திவான் பதவியை சர் ஸி. பி. ராமஸ்வாமி ஐயர் ராஜிநாமாச் செய்து விட்டாராம்.

"ஆற்றங்கரையின் மரமும் அரசறிய
வீற்றிருந்த வாழ்வும் விழுமன்றே—"

என்பதாகத் தமிழிலே ஒரு பாட்டு இருக்கிறது. சர் ஸி. பி.யின் வாழ்க்கை மேற்படி பாட்டுக்கு ஓர் உதாரணமாகும்.

சர் ஸி. பி. சென்ற பதினொரு வருஷ காலமாகத் திருவாங்கூர் திவானாக இருந்து வந்தார். திருவாங்கூர் சமஸ்தானம் என்றால் சர் ஸி. பி., சர் ஸி. பி. என்றால் திருவாங்கூர் சமஸ்தானம் என்று சொல்லும்படியாக அவர் அங்கே ஆட்சி நடத்தி வந்தார். திருவாங்கூர் சர்க்கார் சார்பாக அவர் இட்டதே சட்டம்; தட்டிக் கேட்க யாருக்கும் அதிகாரம் கிடையாது. அவ்வளவு செல்வாக்குடன் வாழ்ந்து வந்தவர் தம்முடைய பதவியை ராஜிநாமாச் செய்ததுடன், இனிமேல் தத்துவ விசாரணை செய்யப் போவதாகவும் இலக்கியம் படிக்கப் போவதாகவும் சொல்லியிருக்கிறார். ஆகா! இந்த முடிவை மட்டும் அவர் இன்னும் சில மாதங்களுக்கு முன்பு செய்திருந்தால் எவ்வளவு நன்றாயிருக்கும்!

சர் ஸி. பி. தாம் ராஜிநாமா செய்து விட்டதை அறிவித்துவிட்டு, அத்துடன் தாம் திருவாங்கூர் சமஸ்தானத்துக்கு இது

வரை செய்திருக்கும் நன்மைகள் என்னென்ன வென்பதையும் வரிசைக் கிரமமாகச் சொல்லி யிருக்கிறார். அவசியம் சொல்ல வேண்டியதுதானே!

சர் ஸி. பி. திருவாங்கூர் சமஸ்தானத்திலே கல்வி யறிவைப் பெருக்கி யிருக்கிறார். புதிதாகப் பல தொழிற்சாலைகளை ஏற்படுத்தி யிருக்கிறார். சர்க்காருடைய வருமானத்தை அதிகப்படுத்தி யிருக்கிறார். இதெல்லாம் உண்மைதான். திருவாங்கூர் சமஸ்தானத்தின் முன்னேற்றத்துக்காக சர் ஸி. பி. ரொம்பவும் உழைத்திருக்கிறார் என்பதை எல்லோரும் ஒப்புக் கொள்வார்கள். ஆனால், செய்ததை யெல்லாம் செய்துவிட்டு, கடைசியில் கழுநீர்ப் பானையில் கைவைத்து விட்டாரே என்றுதான் எல்லாரும் வருத்தப்படுகிறார்கள். சமஸ்தானங்கள் இந்திய யூனியனில் சேராமல் விலகி யிருக்கும்படியாகத் தூண்டிவிட்ட புண்ணியத்தை சர் ஸி. பி. கட்டிக் கொண்டது ரொம்பவும் வருந்தத்தக்க விஷயம். இத்தகைய காரியத்தில் அவர் இறங்கி யிரா விட்டால், சுதந்திர இந்தியாவில் பல அரிய பெரிய பதவிகள் வகித்து தேசத்துக்குப் பல சிறந்த தொண்டுகள் செய்திருக்க முடியும். இப்போது அவருடைய திறமையும் மேதையும் தேசத்துக்குப் பயன்படாமல் போகின்றனவே என்பதுதான் நமக்கு எல்லாவற்றிலும் அதிக வருத்தத்தை உண்டாக்குகிறது.

## கலைக் களஞ்சியம்

ஆகஸ்ட் 15உ பாரத நாட்டினருக்கெல்லாம் சுதந்திரம் கிடைத்ததனால் அமோக மகிழ்ச்சி ஏற்பட்டு அபரிமிதமான கொண்டாட்டங்கள் நடைபெற்றன. சுதந்திரம் கிடைத்ததினால் ஏற்பட்டுள்ள பொதுஜன உற்சாகத்தைத் தேசத்துக்குப் பயன்படும் நிர்மாண வழிகளில் பயன்படுத்திக் கொள்ள வேண்டும் என்று பல தலைவர்கள் பேசி யிருக்கிறார்கள். நமது சென்னைக் கல்வி மந்திரி ஸ்ரீ அவிநாசிலிங்கம் அவர்கள் மேற்படி சுதந்திர உற்சாகத்தை ஒரு சிறந்த நிர்மாணத் தொண்டுக்குப் பயன்படுத்திக் கொள்ளத் திட்டம் போட்டு விண்ணப்பமும் விடுத்திருக்கிறார். தமிழில் "கலைக் களஞ்சியம்" என்னும் சகல ஞானப் பொக்கிஷ நூலைக் கொண்டு வருவதற்குத் தமிழ் வளர்ச்சிக் கழகத்தின் மூலமாக அவர் பெரும் பிரயத்தனம் தொடங்கியிருக்கிறார்.

பழந் தமிழர்கள் "ஆய கலைகள் அறுபத்து நான்கு" என்று சொன்னார்கள்.

ஆனால் ஆங்கில பாஷையில் உள்
"என்ஸைக்ளோபீடியா பிரிட்டானிகா
என்ற நூலைப் பார்த்தால், "கலைகள் அ
பத்து நான்கல்ல, — அறுபத்து நா
யிரம்" என்று சொல்லத் தோன்று
உலகமெங்கும் அறிஞர்கள், ஞானிகள், க
ஞர்கள் கண்டு பிடித்திருக்கும் சகல வி
யங்களைப் பற்றியும் அதில் விரிவாக எழுத
பட்டிருக்கும். பூமியின் அடிவாரத்தில் கிட
கும் உலோகங்களிலிருந்து வான மண்
லத்தில் கண்ணுக் கெட்டாத தூரத்
லிருந்து ஒளிவிடும் நட்சத்திர மண்டல
வரையுள்ள அத்தனை விஷயங்களைப் பற்
யும் அதில் விளக்கப்பட்டிருக்கும்.

சுமார் நூற்றெழுபத்தொன்பது ஆண்
களுக்கு முன்னால் மூன்று புத்தகங்களா
மேற்படி நூல் வெளிவந்தது. ஒவ்வொரு
புதுப் பதிப்பிலும் புத்தகம் விரிவாகி
பெரிதாகி வந்தது. கடைசியாக 1922-
ஆண்டில் ஆயிரம் பக்கங்கள் கொண்ட
ராட்சதப் புத்தகமாக 32 புத்தகங்க
வெளிவந்திருக்கின்றன. அப்படி யென்றால்
அதில் எத்தனை எத்தனை விஷயங்க
இருக்க வேண்டும், அதற்கு எத்தனை பே
எவ்வளவு உழைப்பு உழைத்திருக்
வேண்டும் என்று யோசித்துப் பாருங்கள்!

இதைப்போன்ற "கலைக் களஞ்சிய"
நூலைத் தமிழில் வெளியிட நமது கல
கல்வி மந்திரி சுதந்திரப் பெருநாளி
முயற்சி தொடங்கியிருக்கிறார். பல அ
ஞர்கள் சேர்ந்து பற்பல ஆண்டுகள் இடை
விடா ஊக்கத்துடன் செய்ய வேண்டி
தொண்டு. பணச் செலவு ஏராளமா
ஆகும் என்று சொல்லவேண்டியதில்லை
"கலைக் களஞ்சியத்தை உண்டாக்கு
தற்கு ஏராளமான செலவு ஆகும். 'அ
வேலையை ஆரம்பிப்பதற்கே குறைந்த
ஒரு லக்ஷம் ரூபாய் வேண்டியிருக்கும்
கல்வித் துறையிலும் மொழி அபிவிருத்
யிலும் ஆர்வம் உள்ளவர்களுக்கு இது ஒ
அரிய சந்தர்ப்பம்" என்று கல்வி மந்திர
தமது அறிக்கையில் சொல்லியிருக்கிறார்
இத்தகைய அரிய சந்தர்ப்பத்தை நழு
விடாமல் செட்டிநாடு ராஜா அண்ணாமலை
செட்டியார், டாக்டர் அளகப்பச் செட்டி
யார், வடபாதிமங்கலம் ஸ்ரீ தியாகராஜ
முதலியார் ஆகியவர்கள் பெருந் தொகை
உதவி யிருக்கிறார்கள். அவர்களைப் பின்
பற்றித் தமிழ்நாட்டுத் தனவந்தர்களும் மற்
வர்களும் "கலைக் களஞ்சிய" முயற்சிக்கு
உதவி செய்ய முன் வருவார்களாக.




யுத்த தேவதை வாழும் செவ்வாய்க் கிரகத்தைக் காட்டிலும் பெரியதும் ஒளி பொருந்தியதுமான
புதிய பக்கிரகம் ஒன்று வானத்தில் தோன்றியிருப்பது கண்டு உலகம் அதிசயிக்கிறது!

# அடுத்த வேலை

சபாஷ்!

தமிழ்நாடு ஜமாய்த்து விட்டது!

ஜமாய்க்காமல் என்ன செய்யும்?

இதுவரையில் தமிழ்நாடு எந்த நல்ல காரியத்தில்தான் பின்வாங்கியிருக்கிறது?

கல்வியிலும், கலாசாரத்திலும், கைத்தொழிலிலும், தேசியத் திருப்பணியிலும், தியாகத்திலும் தமிழ்நாடு முன்னணியில் நின்று வந்திருப்பது சரித்திரப் பிரசித்தமான விஷயம்.

கதர் இயக்கத்திலும் சரி, காராக்கிரகப் பிரவேசத்திலும் சரி,—ஹரிஜன இயக்கத்திலும் சரி, ஹிந்து முஸ்லிம் ஒற்றுமையிலும் சரி, — தேர்தல்கள், மதுவிலக்கு, அரசாங்க நிர்வாகம் எதுவாயினும் சரி, தமிழ்நாடு மற்ற மாகாணங்களுக்கு வழிகாட்டியாக இருந்து வந்திருக்கிறது என்று கூறுவது மிகையாகாது.

எனவே, சுதந்திர தினத்தை மிக மிகச் சிறப்பாகக் கொண்டாடுவதிலும் தமிழ் மாகாணம் முதன்மையாக விளங்கியதில் ஆச்சரியமில்லை.

முக்கியமாகச் சென்னைமா நகரில், சுதந்திர தினத்திலிருந்து மூன்று நான்கு நாட்கள் வரையில் பகலும் இரவும் ஒன்றாகி விட்டது!

அதாவது, இரவில்கூட சூரியன் பிரகாசித்தான்! ஜனங்கள் தூங்கவில்லை. கட்டுக்கடங்காத உற்சாகம் ததும்பும் ஜன சமுத்திரம் நகர வீதிகளில் அலைமோதியது. சுதந்திர சூரியனை ஜொலிப்பது போலிருந்தது தீபாலங்காரங்களின் தோற்றம்.

மகத்தான ஜனத்திரளால் ஏற்படக்கூடிய தவிர்க்கமுடியாத சில சில்லறை விபரீதங்கள் கூட மேற்படி ஜன சமுத்திரம் திரண்டபோது உண்டாகவில்லை. ஜனங்களிடை அவ்வளவு குதூகலமும் ஒற்றுமையும் சகோதர பாவமும் நிலவின.

"ஐயோ, சுதந்திர சூரியனே! இது என்ன அநியாயம், கண்கள் கூசுகின்றனவே!" என்று கண்களை இறுக மூடிக் கொண்ட சிலர்கூட, "சுதந்தி[ர] சூரியனே, திரும்பிப் போ!" என்[று] கோஷம் செய்து பரிதாபகரமாக ... வலம் செல்லும் அளவுக்குப் போகாம[ல்] புத்திசாலித்தனமாக நடந்து கொண்டார்கள்.

இதெல்லாவற்றையும்விட மேலா[க] சென்னை கவர்னர் சர் ஆர்ச்பால்[ட்] ... தை, 'ஜெய் ஹிந்த்!' என்று கோஷ[ம்] செய்து சுதந்திர தினத்தை வ[ர]வேற்றார்.

• • •

இவை மாத்திரமல்ல; சுதந்தி[ர] ஆரம்ப வைபவத்தின்போது சு... சகுனங்களாக இன்னும் பல அற்பு[த] சம்பவங்கள் நிகழ்ந்திருக்கின்றன.

சென்ற ஒரு வருஷத்துக்கு மேலாக கல்கத்தாவில் நிகழ்ந்து வந்த வகுப்பு[க்] கலகங்கள் திடீரென நின்று, ஹிந்து முஸ்லிம் ஒற்றுமை ஏற்பட்டிருக்கிறது.

பழம் நழுவிப் பாலில் விழுந்தது போன்று, மகாத்மா காந்தி கல்கத்தா[]வுக்கு விஜயம் செய்த சமயத்தில் ராஜாஜியும் அங்கு கவர்னராக[ச்] சென்றிருப்பதால், திடீரென நிலைமை[]யில் பெரும் மாறுதல் ஏற்பட்டிருக்கிறது.

ஆம், காந்திஜியையும் ராஜாஜியை[]யும் போன்ற புண்ணிய புருஷர்கள் இருக்குமிடத்தில் எவ்வாறு வகுப்பு வெறியோ, அல்லது வேறு விதமான விபரீதமோ தலைகாட்ட முடியும்?

எனவே, "நாற்பது ஆண்டுகளுக்கு முன் சுதந்திரப் போரை ஆரம்பித்து வழி காட்டிய வங்காளம், பெற்ற சுதந்திரத்தை நிலை நிறுத்துவதற்கும் இப்போது வழி காட்டியிருக்கிறது" என்று கவர்னர் ராஜாஜி கூறியுள்ள வார்த்தைகள் இந்தியா முழுதும் எ... ரொலிக்கின்றன.

வகுப்பு வெறி இன்னும்கூடத் தலை விரித்தாடும் பஞ்சாபத்துக்கும் வங்காளத்தின் நல்ல காலம் ஏற்படுமா? அவ்வாறு ஏற்படவே பாரத நாட்டின் பிரதம புருஷரான பண்டித நேரு பகீரதப் பிரயத்தனம் செய்து வருகிறார்.

கிழக்கு வங்காளத்தில் தோல்வியுற்ற அதிர்ச்சி காரணமாக வங்காளத்தின் மாஜி பிரதமரான ஜனுப் ஷுரவர்த்தியும் இப்போது புனர்ஜன்மம் அடைந்திருப்பது வங்காளத்தின் அதிர்ஷ்டம் மாத்திரமல்ல, இந்தியாவின் அதிர்ஷ்டமேயாகும்.

ஹிந்து-முஸ்லிம் ஒற்றுமை ஏற்படுவதற்காக இன்று காந்திஜியும் ஷுரவர்த்தியும் ஒரே மேடையில் பிரசங்கம் செய்து வருவதைக் காட்டிலும் உருக்கமான, ஆனந்தமான, அற்புதமான காட்சி வேறென்ன இருக்க முடியும்?

“இந்தியாவுக்குக் கொடுக்க வேண்டிய கடனா? யார் கொடுக்க வேண்டும்? எதற்காகக் கொடுக்க வேண்டும்? ஜப்பானியர் படையெடுப்பினால் ஆபத்து ஏற்பட்டு விடாமல் இந்தியாவை நாங்கள் அல்லவா காப்பாற்றினோம்?” என்றெல்லாம் வம்பு பேசி ஸ்டர்லிங் கடனை மழுப்பிவிடப் பார்த்த பிரிட்டிஷார்கூட அந்தக் கடனிலிருந்து முதல் தவணையாக ஆறரைக் கோடி பவுன் கொடுக்க இசைந்திருக்கிறார்கள்.

ஸ்டர்லிங் கடன் விஷயமாக, உலகப் பிரசித்தி பெற்ற பொருளாதார சாஸ்திர நிபுணரான ஜி. டி. எச். கோல் சமீபத்தில் கூறியிருந்த அபிப்பிராயமானது, ஒருவேளை பிரிட்டிஷ் சர்க்காரின் மேற்படி மனமாற்றத்துக்குக் காரணமாக இருக்கலாம்.

“இந்தியா தானாக யுத்தப் பிரகடனம் செய்யவில்லை. எனவே, யுத்தச் செலவை இந்தியாவும் ஏற்றுக் கொள்ள வேண்டும் என்று கூறுவது நியாயமற்ற வாதம்.

“கடனைக் கொடுக்கக் கூடிய சக்தி பிரிட்டனுக்கு இல்லை என்று கூறுவதும் நேர்மையானதல்ல. கொடுக்கக்கூடிய சக்தி இல்லை என்பதற்காக, கடனை மறுப்பது யோக்கியப் பொறுப்பாகுமா?

“கொடுக்க சக்தி இல்லை என்றால், பிரிட்டன் இந்தியாவிடம் தன் கஷ்டங்களை எடுத்துக் கூறி ஏதாவது சமரசம் செய்து கொள்ள வேண்டுமேயல்லாது, கடனை மறுப்பது பிரிட்டனின் நாணயத்துக்கே இழுக்காகும்.

“மற்றும், பிரிட்டன் தன்னைக் காட்டிலும் ஏழ்மையான ஒரு தேசத்துக்கு, தான் கொடுக்க வேண்டிய கடனை மறுப்பது கூடவே கூடாது.”

பிரிட்டிஷ் பேராசிரியர் கோல் அவ்வாறு கூறிய பின்னர்தானோ என்னவோ பிரிட்டிஷ் சர்க்காருக்கு அவ்விஷயமாக ஞானோதயமாகியிருக்கிறது.

எனவே, சுதந்திர இந்தியாவின் புதுக் கணக்கில் முதன் முதலாக மேற்படி தொகையை, அதாவது ஆறரைக் கோடி பவுனை வரவு வைத்துக் கொள்ளலாம்!

மூன்றாவதாக, அன்னிய ஆதிக்கத்தின் கடைசி சின்னமான பிரிட்டிஷ் துருப்புகளின் முதல் கோஷ்டி கப்பலேறி விட்டது.

ஒரு தேசத்தில் அத்தேச ஜனங்களின் இஷ்டத்துக்கு விரோதமாகத் துருப்புகள் இருப்பது அடிமைத்தனத்தின் சின்னம், அவமானம், அநியாயம்!

இன்று சகல ஆசிய நாடுகளிலும் அன்னியத் துருப்புகள் இருக்கின்றன. அதனால்தான், “ஆசிய நாடுகளில் அன்னியத் துருப்புகளுக்கு என்ன வேலை?” என்று சமீபத்தில் ஜவாஹர்லால்ஜி கேட்டார்.

எனவே, இந்தியாவிலிருந்து வெளியேறும் பிரிட்டிஷ் துருப்புகளைப் பின்பற்றி, இந்தோனேஷியாவிலிருந்து டச்சுத் துருப்புகளும், வியட்நாமிலிருந்து பிரெஞ்சுத் துருப்புகளும் வெளியேறினால், ஆசியாவின் துன்பத்தில் பெரும் பகுதி தொலைந்துவிடும்.

பிறகு, ஆசியாவிலிருந்து மற்ற தேசத் துருப்புகளும் தங்கள் தங்கள் நாட்டுக்குத் திரும்பிச் செல்ல அதிக காலமாகாது.

நான்காவதாக, சென்ற பல தலைமுறைகளாக இந்தியாவின் விதியை தன்னிஷ்டப்படி ஆட்டி வைத்து வந்த பிரிட்டனிலுள்ள இந்திய மந்திரி காரியாலயமும் யாதொரு சடங்குமின்றி மூடப்பட்டு விட்டது.

• • •

இந்தியாவின் லட்சியம், நமது மாபெருந் தலைவர்களின் லட்சியம், கோடிக் கணக்கான பாரத நாட்டு மக்களின் லட்சியம் நிறைவேறி விட்டது.

இந்தியர்களுக்குச் சுதந்திரமும் பூரண நிர்வாக அதிகாரமும் கிடைத்து விட்டன. எனினும், இத்துடன் நம் தலைவர்களின் தொண்டும் கடமையும் பொறுப்பும் முடிந்துவிடவில்லை.

இனிமேல்தான் அவர்கள் மகத்தான பொறுப்புகளை வகிக்க வேண்டியவர்களாக இருக்கிறார்கள். இனிமேல்தான் அவர்கள் இன்னும் அதிகமாக தொண்டு செய்ய வேண்டியவர்களாக இருக்கிறார்கள்.

சுதந்திரம் கிடைத்துவிட்ட தெனினும், கோடிக் கணக்கான மக்களின் கஷ்டங்கள் தீர்ந்து விடவில்லை.

ஜவாஹர்லால்ஜி குறிப்பிட்டிருப்பது போல், வறுமை ஒழிய வேண்டும்; பிணி தொலைய வேண்டும்; அறியாமை அகல வேண்டும்; வகுப்பு வெறி நீங்க வேண்டும்; வாழ்க்கையின் மகோன்னதமான நிலைக்குவர, உயர்வு தாழ்வின்றி ஒவ்வொருவருக்கும் சமமான சந்தர்ப்பம் கிடைக்க வேண்டும்; யாரும் கண்ணீர் விடக் கூடாது; அதிக உணவு உற்பத்தியாக வேண்டும்; கைத்தொழில் பெருகி, அதிக சாமான்கள் தயாராக வேண்டும்.

தேசத்தின் செல்வம், சக்தி, திறமை முதலியன யாவும் பொது ஜனங்களின் நன்மைக்காக உபயோகிக்கப்பட வேண்டும்.

அதாவது, நமது தலைவர் இலக்கங்கள் இதுவரை அரசியல் போராட்டத்தில் ஈடுபட்டு வந்தார்கள். பாரத மக்கள் அவர்களுக்கு ஏகோபித்து ஆதரவளித்தனர். அவர்களின் கட்டளைகளைச் சிரமேற் கொண்டனர். அதன் பயனாக அரசியல் துறையில் வெற்றி கிடைத்து விட்டது.

இனி பொருளாதாரத் துறையில் போராட்டம் ஆரம்பமாகின்றது. இனி பஞ்சத்தையும் பிணியையும் எதிர்த்துப் போராடி வெற்றி காண வேண்டும்.

சுதந்திரம் கிடைத்திருப்பதன் உண்மையான பலனை ஜனங்கள் அப்போதுதான் அனுபவிக்க முடியும்.

"தனியொருவனுக் குணவிலை யெனில்
ஜகத்தினை யழித்திடுவோம்!"

என்றார் மகா கவி பாரதியார்.

இன்று நமது மாபெரும் தலைவர்களும் அதே பிரதிக்ஞையைத்தான் எடுத்துக் கொண்டிருக்கிறார்கள்.

சுதந்திரமின்றி மேற்படி பிரதிக்ஞையை நிறைவேற்றுவ தென்பது முடியாத காரியம். ஆனால், இப்போது நாம் சுதந்திரம் பெற்று விட்டதால், அந்தப் பிரதிக்ஞையை நிறைவேற்றுவதற்கும் வழி பிறந்திருக்கிறது.

அறுபத்திரண்டு ஆண்டுகளுக்கு முன் ஊன்றப்பட்ட ஒரு சிறு விதை முளை விட்டு, செடியாகி, மரமாகி, பூத்து, காய்த்து, அமுதக் கனியையும் கொடுத்திருக்கிறது. நாற்பது கோடி மக்களுக்கும் சுபிட்சமாகிற நிழலையும் கொடுக்கப் போகின்றது. பாரத பூமியெங்கும் பரந்து நிற்கும் இந்த அகண்ட ஆல விருட்சத்தின் கிளைகள், கடல் கடந்த பிரதேசங்களிலும் வியாபித்து அங்குள்ள இந்திய மக்களுக்கும் அபயமளிக்கின்றன.

பயங்கரப் புயல், பெரு மழை, செயற்கைக் கடவுளின் (பிரிட்டனின்) கோபாவேசம், புல்லுருவிகளின் நிராத் தொல்லைகள் முதலியன அந்த ஆல விருட்சத்தின் வளர்ச்சியைத் தடுக்க முடியவில்லை; அதை அசைக்கவும் முடியவில்லை.

பாரதத் தவப் புதல்வர்களின் உழைப்பாகிற உரம் மேற்படி தேசிய காங்கிரசின் அமோகமான வளர்ச்சிக்குக் காரணமாகியது; அவர்களின் நெஞ்சுருகியாகிற தண்ணீர் பிரிட்டிஷ் ஏகாதிபத்திய தெய்வத்தின் கோபக் கனலை அணைத்து விட்டது; அவர்களுடைய தியாகமாகிற சக்கராயுதம் புல்லுருவிகளை யெல்லாம் 'போல போல' வென்று உதிரும்படி செய்து விட்டது.

எனவே, அவ்வளவு மகிமை வாய்ந்த காங்கிரஸ் ஸ்தாபனத்தையும் தலைவர்களையுமே இனியும் பாரத நாட்டு ஜனங்கள் கண்களை மூடிக்கொண்டு பின்பற்ற வேண்டும்.

உலகமே அதிசயிக்கும்படியான அறநெறியால் சுதந்திரத்தைக் கொண்டு வந்த நமது மாபெருந் தலைவர்கள், உலகமே அதிசயிக்கும்படியான முறையால் ஜனங்களுக்குச் சுபிட்சத்தையும் பொருளாதார க்ஷேமத்தையும் கொண்டு வருவார்கள் என்பதில் சந்தேகமில்லை.

எனவே, ஜனங்கள் மாகாண சர்க்கார்களுக்குப் பூரண ஆதரவளித்து வரவேண்டும். மாகாண சர்க்கார்கள் பரஸ்பரம் ஒத்துழைப்பதுடன், இந்திய சர்க்காருடனும் பூரணமாக ஒத்துழைக்க வேண்டும்.

அவ்விதமாயின், ஒரு சில வருஷங்களில் பாரத நாடு, ஆசியாவில் மாத்திரமல்ல, அகில உலகிலும் அமைதியும் சுபிட்சமும் நிலவுமாறு செய்யக் கூடிய வல்லமை பொருந்திய ஜனநாயக அரசாகத் திகழும் என்பது நிச்சயம்.




# ஆனந்த நகரம்

கல்கி

கவிஞர்களும் ஆசிரியர்களும் தங்கள் கற்பனா சக்தியினால் எத்தனையோ அற்புதங்களைச் சிருஷ்டி செய்கிறார்கள். சொர்க்கத்தையும் நரகத்தையும் உண்டாக்குகிறார்கள். பூலோகத்திற்குச் சொர்க்கத்தைக் கொண்டு வந்து விடுகிறார்கள். சூரியனையும் சந்திரனையும் ஏக காலத்தில் பிரகாசிக்கச் செய்கிறார்கள். துஷ்ட மிருகங்களைச் சாதுப் பிராணிகள் ஆக்குகிறார்கள். ராட்சதர்களைப் பரம பக்தர்கள் ஆக்குகிறார்கள். கயிறை மணலாகத் திரிக்கிறார்கள். கடலைப் பம்பரமாக்கிச் சுழற்றுகிறார்கள். பானைக்குள்ளே யானையைப் புக விடுகிறார்கள். யானையின் தலைமேல் பானையைப் போட்டு உடைக்கிறார்கள்!

இப்படி ஆசிரியர்களும் கவிகளும் கற்பனை செய்யும் அற்புதங்கள் எல்லாவற்றையும் விடப் பெரிய அற்புதம் ஆகஸ்டு 14உ 15உ களில் கல்கத்தா நகரத்தில் நடைபெற்றது.

முதல் நாள் 13உ வரையில் துன்ப நரகமாயிருந்த பட்டணம் 14உ இரவு திடீரென்று ஆனந்த நகரமாய் மாறிற்று.

அழுது கொண்டிருந்த மக்கள் ஆனந்தக் கூத்தாடினார்கள். அஞ்சிப் பதுங்கிக் கொண்டிருந்தவர்கள் கோலாகலமாக ஊர்வலம் நடத்தினார்கள். துவேஷத்தினால் குத்திக் கொண்டும் வெட்டிக் கொண்டும் இருந்தவர்கள் ஒருவரையொருவர் கட்டிக்கொண்டு குதூகலப்பட்டார்கள். உரத்துப் பேசத் துணிவின்றி மெலிந்த குரலில் முனகிக் கொண்டிருந்தவர்கள் வானளாவும்படி ஜெயகோஷம் புரிந்தார்கள்.

ஈ காக்கை கூடக் காண முடியாமல் வெற்றுப் பாலைவனமாகக் கிடந்த வீதிகளில் ஜனசமுத்திரம் அலை மோதிக் கொண்டு பொங்கி எழுந்தது.

ஏக காலத்தில் ஆயிரம் கீழ்ப்பாக்கங்களை, அதாவது பைத்தியக்கார ஆஸ்பத்திரிகளை திறந்துவிட்டதுபோலக் கல்கத்தா நகரம் காட்சி அளித்தது! கீழ் நாட்டிலேயே மாபெரும் நகரம் என்று பிரசித்தி பெற்ற கல்கத்தாவின் நாற்பது லட்சம் ஜனங்களும் திடீரென்று பைத்தியம் பிடித்தவர்களானார்கள். மிதமிஞ்சிய மகிழ்ச்சியினால் ஏற்பட்ட எக்களிப்புப் பைத்தியந்தான்! அந்த எக்களிப்பு மூன்று இரவும் இரண்டு பகலும் நீடித்திருந்தது!

* * *

குழந்தை ராதா ஒரு நாள் பள்ளிக்கூடத்திலிருந்து திரும்பி வந்தாள். தன் செல்வத் தகப்பனாரைப் பார்த்து, "அப்பா! இன்றைக்குப் பள்ளிக்கூடத்தில் வாத்தியார் அம்மா 'மூன்றிலே எட்டுப் போகுமா?' என்று கேட்டாள். எல்லாக் குழந்தைகளும் 'போகாது' 'போகாது' என்றார்கள். நான் மட்டும் 'போகும்' என்று சொல்லி விட்டேன், அப்பா!" என்றாள்.

தகப்பனார் தன் செல்லக் குழந்தையைப் பார்த்து, "சபாஷ்! என் கண்மணி! மூன்றிலே எட்டு பேஷாகப் போகட்டும்! போகாது என்று யார் சொன்னது?" என்றார். இதைக் கேட்டுக்கொண்டு பக்கத்திலிருந்த கிதேகிதர், "ஆமாம்; நிச்சயமாய்ப் போகட்டும்! ஏன் போகக் கூடாது? இங்கிலீஷ்காரனே இந்தியாவை விட்டுப் போகும்போது, மூன்றிலே எட்டு ஏன் போகாது?" என்று சொன்னார்.

இங்கிலீஷ்காரர் இந்தியாவை விட்டுப் போகக் குறிப்பிட்ட ஆகஸ்டு 15௳ யன்றும் அதற்கு முன் பின் தினங்களிலும், மூன்றிலே எட்டுப் போவதைக் காட்டிலும் மிக மிக அதிசயமான சம்பவங்களைக் கல்கத்தா நகரில் நான் பார்த்தேன். இருபது பேர் நெருக்கி அடித்துக் கொண்டு உட்காரக் கூடிய லாரியில் அறுபது பேர் உட்கார்ந்திருப்பதைப் பார்த்தேன். அந்த அறுபது பேரும், அறுநூறு பேர் போடக்கூடிய உரத்த சத்தத்துடன் ஜய கோஷம் செய்வதைக் கேட்டேன். பத்து மோட்டார் வண்டிகள் நிற்கக்கூடிய இடத்தில் எண்பது வண்டிகள் நிற்பதையும், ஆயிரம் பேருக்கு மேல் ஒரு நாளும் நிற்க முடியாது என்று கருதக்கூடிய இடத்தில் ஐயாயிரம் பேர் நிற்பதையும் பார்த்தேன்.

ஐந்து பேர் உட்காரக் கூடிய மோட்டார் வண்டியில் பன்னிரண்டு பேர் உட்கார்ந்திருக்கக் கண்டேன். மணிக்கு அறுபது மைல் தூரம் போகக் கூடிய மோட்டார் வண்டி இரண்டு மணி நேரத்தில் அரை மைல் தூரங்கூடப் போக முடியாமல் அங்குலம் அங்குலமாக நகர்ந்து கொண்டிருப்பதைக் கண்டேன்!

"மூன்றிலே எட்டுப் போகாது" என்று சொல்லுவதானால், மேற்படி சம்பவங்களெல்லாம் எப்படி நடந்திருக்க முடியும்?

• • •

ஆகஸ்டு மாதம் 15௳ இந்தியா சுதந்திரம் அடைந்த திருநாள். இருநூறு வருஷம் அடிமை வாழ்வில் உழன்ற ஒரு தேசம் சுதந்திரம் அடைந்தது என்றால் ஜனங்கள் அதை ஆனந்தத் திருநாளாகக் கொண்டாடுவது இயல்புதான். அவ்விதமே, துர்ப்பாக்கிய பாஞ்சாலத்தைத் தவிர மற்றப்படி பாரத தேசம் முழுவதிலும் சுதந்திரத் திருநாளை ஜனங்கள் கொண்டாடினார்கள். கோலாகலமாகக் கொண்டாடினார்கள். ஆனாலும், கல்கத்தாவில் கொண்டாடியது போலக் கொண்டாடினார்களா என்றால், "இல்லவே இல்லை!" என்றுதான் சொல்ல வேண்டும். மற்ற இடங்களில், அதாவது பம்பாய், டில்லி, சென்னை முதலிய நகரங்களில் நடந்த வைபவங்களைப் பற்றிக் கேட்டும் படித்தும் தெரிந்துகொண்டு ஒப்பிட்டுப் பார்த்த பிறகுதான் சொல்லுகிறேன். கல்கத்தாவில் ஜனங்கள் சுதந்திரத் திருநாள் கொண்டாடியது போல வேறு எந்த நகரத்திலும் கொண்டாடவில்லை; கொண்டாடியிருக்க முடியாது.

சுதந்திரத் திருநாளின்போது கல்கத்தா ஆனந்த நகரமாக மாறிய அற்புதத்தின் மகிமையை நன்கு உணர வேண்டுமானால், அதற்கு முன்னால் கல்கத்தா துன்ப நகரமாயிருந்ததைப் பற்றியும் சிறிது தெரிந்திருக்க வேண்டும். அதைத் தெரிந்து கொள்வதற்கு வாய்ப்பாகப் பத்து நாளைக்கு முன்னதாகவே நான் கல்கத்தா போய்ச் சேர்ந்தேன். எதற்காகப் போக நேர்ந்தது என்பது பற்றி இதோ சுருக்கமாகச் சொல்லி விடுகிறேன்.

விசுவபாரதி என்றும் சாந்திநிகேதனம் என்றும் உலகெங்கும் புகழ்பெற்ற டாக்டர் டாகூரின் மகத்தான வித்யா ஸ்தாபனத்துக்கு நமது செட்டி நாட்டு ராஜா அண்ணாமலைச் செட்டியார் சுமார் இரண்டாயிரம் ரூபாய்க்குத் தமிழ்ப் புத்தகங்கள் அளித்தார். திருக்குறள் முதல் இதய ஒலி வரையில் அருமையான ஆயிரம் தமிழ் நூல்கள் கொண்ட மேற்படி புத்தகசாலையின் திறப்பு விழா நடத்துவதற்கு ரஸிகமணி டி. கே. ஸி. அவர்களை விசுவபாரதி நிர்வாகிகள் அழைத்திருந்தார்கள். ஆகஸ்டு மாதம் 8௳ மகாகவி டாகூர் அமரர் ஆன தினம். அந்தப் புண்ணிய தினத்தில் தமிழ்ப் புத்தகசாலை விழாவை நடத்துவதற்குத் தேதி குறிப்பிட்டிருந்தார்கள்.

இந்தச் செய்தி அறிந்த கல்கத்தா பாரதி தமிழ்ச் சங்கத்தார் ஆகஸ்டு 10௳ யன்று தங்கள் சங்கத்தில் ராஜாஜியின் உருவப் படத்தைத் திறந்து வைக்கவேண்டுமென்று ரஸிகமணியைக் கேட்டுக் கொண்டார்கள். "இதோ கரும்பு; சாப்பிடுங்கள்!" என்றால், "கூலி எங்கே?" என்று ரஸிகமணி கேட்கக்கூடியவரா? அல்லது "பல்லை வலிக்குமே?" என்று பார்க்கக்கூடியவரா? "சரி" என்று உடனே ஒப்புக் கொண்டார்.

இதெல்லாம் ஜூலை மாதத்திலேயே ஏற்பாடான காரியங்கள். ஆகஸ்டு 4௳ காலை விமான கூடத்துக்குப் புறப்பட்டுச் செல்லும்

சமயத்தில் "ராஜாஜி மேற்கு வங்காளத்தின் கவர்னர்" என்ற செய்தி வந்தது.

பிறகு, என்ன செய்வது? என்னத்தைத் தான் செய்வது? கல்கத்தா போய் இறங்கியதும் முதற் காரியமாக, 12உ திரும்புவதற்கு வாங்கியிருந்த விமான டிக்கட்டை 17உ என்று மாற்றிக் கொண்டோம்.

ராஜாஜி கல்கத்தாவில் கவர்னராக முடிசூட்டப்படும் வைபவத்தைப் பார்க்காமல் நாங்கள் திரும்ப முடியுமா? அப்படித் திரும்புவதற்குக் கல்கத்தா தமிழர்கள் விடுவார்களா? அப்படியே திரும்பி வந்தாலும் தமிழ் நாட்டிலுள்ள தமிழர்கள்தான் எங்களைச் சும்மா விடுவார்களா? "அவ்வளவு அவசரமாக உங்களுக்கு இங்கே என்ன வேலை?" என்று கேட்க மாட்டார்களா?—முக்கியமாக "கல்கி" நேயர்கள் கேட்காமல் விடுவார்களா?

* * *

கல்கத்தாவில் போய் இறங்கியவுடனே பாரதி தமிழ்ச் சங்கத்தார் எங்களைக் கைப்பற்றித் தங்களுடைய பாதுகாப்பில் ஏற்றுக் கொண்டார்கள். சங்கத்தின் தலைவர் ஸ்ரீ சீதாபதி எங்களைத் தமது காரில் ஏற்றிக் கொண்டு, தாமே வண்டி ஓட்டி, பந்தோபஸ்தாக ஜாகையில் கொண்டு வந்து சேர்த்தார். "இன்னும் கால்மணி முன்னதாக வந்திருக்கலாம். ஆனால், கொஞ்சம் நேரமானாலும் ஆகட்டும் என்று சுற்று வழியாக அழைத்து வந்தேன். அணுவளவு அபாயம் உள்ள இடத்துக்குக்கூட உங்களை நாங்கள் அழைத்துப் போகக் கூடாது அல்லவா? அப்புறம் தமிழ் நாட்டார் எங்களை இலேசில் விடுவார்களா?" என்றார்.

"அப்படியானால் இன்னும் கல்கத்தா நிலைமை அபாயமாய்த்தானிருக்கிறதா?" என்று கேட்டேன்.

"நேற்றுக்கூட ஒரு பஸ்ஸின்மீது யாரோ துப்பாக்கியால் சுட்டு நாலைந்து பேர் செத்துப் போனார்களாம். நிலைமை அபாயகரந்தான். அதிலும் ஆகஸ்டு 15உ நெருங்குகிறதல்லவா? என்ன நடக்குமோ என்னமோ என்று ஒரே கவலையாகத்தான் இருக்கிறது!" என்றார் பாரதி தமிழ்ச் சங்கத்தின் தலைவர்.

ஸ்ரீ சீதாபதி அருமையான மனிதர். அவரைத் தங்கக் கம்பி என்று சொல்ல நான் தயாராயில்லை. தங்கக் கம்பியைக் கொண்டு என்னத்தைச் செய்வது? அலங்கார ஆபரணம் வேணுமானால் செய்யலாம். மற்றப்படி ஒன்றும் பயனில்லை. எனவே, ஸ்ரீ சீதாபதியைச் செப்புக் கம்பி என்று சொல்வதுதான் சரி. வெறும் செப்புக் கம்பி அல்ல; எலெக்ட்ரிக் செப்புக் கம்பி! செப்புக் கம்பியைப் பக்குவம் செய்கிறபடி செய்துவிட்டால் அதன் வழியாக மின்சார சக்தி பாயச் செய்யலாம். அப்படிப் பாயும் மின்சார சக்தியைக் கொண்டு தீபம் ஏற்றலாம்; வண்டி ஓட்டலாம்; விசிறி சுழற்றலாம்; பல இயந்திரங்களையும் ஓடச் செய்யலாம். இப்படி யெல்லாம் பயனுள்ள காரியங்களைச் செய்யும் ஆற்றல் வாய்ந்தவர் ஸ்ரீ சீதாபதி. மேலும் மின்சாரக் கம்பி செய்யும் ஒரு பெரிய தொழிற்சாலையின் மானேஜராகவும் அவர் உத்தியோகம் பார்க்கிறார்! எனவே, அவரை எலெக்ட்ரிக் செப்புக் கம்பி என்பது பொருத்தந்தானே?

"உங்களை இலேசில் விட்டுவிடப் போவதில்லை. இங்கே இருக்கும்போது ரொம்ப உபயோகப்படுத்திக் கொள்ளப் போகிறோம்!" என்று தலைவர் சீதாபதியும், உபதலைவர் கிருஷ்ணனும், காரியதரிசி தியாகராஜனும் அடிக்கடி சொல்லிக் கொண்டிருந்தார்கள். நாங்களும் பதிலுக்கு, "எங்களை நீங்கள் ரொம்ப நன்றாக உபயோகப் படுத்திக் கொள்ள வேண்டும். இல்லாவிட்டால் உங்களை விடமாட்டோம்!" என்று எச்சரிக்கை செய்தோம்.

"அப்படியானால் நாங்கள் சொல்கிறபடி கேட்க வேண்டும். கண்ட கண்ட இடத்துக் கெல்லாம் போகக் கூடாது. நாங்கள் அழைத்துப் போகிற இடத்துக்குத்தான் போகவேண்டும்!" என்றார்கள்.

"சரி; சாந்திநிகேதனம் மட்டும் போய் வந்து விடுகிறோம். அப்புறம் உங்கள் இஷ்டப்படிதான்!" என்றோம்.

அவ்விதமே சாந்திநிகேதனம் சென்று விட்டு 9உ இரவு திரும்பினோம்.

* * *

கல்கத்தா பாரதி தமிழ்ச் சங்கத்தைப் பற்றி ஏற்கெனவே நேயர்கள் கேள்விப்பட்டிருப்பார்கள். ஒன்றரை வருஷத்துக்கு முன்னால் தமிழ் நாட்டில் அரசியல் விவகாரங்கள் ஒரே குழப்பமாயிருந்தபோது, கல்கத்தாவிலிருந்து ஒரு நல்ல வாக்குக் கேட்டது. "தமிழ் நாட்டார் என்ன நினைத்தாலும் சரி, என்ன சொன்னாலும் சரி, கல்கத்தாவிலுள்ள தமிழர்களுக்கு ராஜாஜி அவசியம் வேண்டும். ராஜாஜிதான் வேண்டும்!" என்று தீர்மானம் போட்டு அனுப்பினார்கள். பாரதி தமிழ்ச் சங்கத்தார்

செய்த காரியந்தான் அது. அந்த நாளிலேயே அப்படித் தீர்மானம் செய்தவர்கள், இப்போது ராஜாஜி கல்கத்தா கவர்னராக வரும் சந்தர்ப்பத்தில் எவ்வளவு குதூகலமாயிருப்பார்கள் என்று சொல்ல வேண்டுமோ?

10உ மாலையில் பாரதி தமிழ்ச் சங்கத்தில் ராஜாஜி படத் திறப்பு விழா அமோகமாக நடைபெற்றது.

கூட்டம் அபரிமிதம். கல்கத்தாவில் இவ்வளவு பெரிய தமிழர் கூட்டம் கூடியதேயில்லையாம். உற்சாகமோ அதைவிடப் பிரமாதம். ராஜாஜி படத்தை ரஸிகமணி திறந்து வைத்துக் கும்பிட்டுக் கொண்டு நின்றபோது, (அட்டைப் படம் பார்க்கவும்) சுமார் பத்து நிமிஷ நேரம் நாதஸ்வர கீதமும் சங்க நாதமும் வாழ்த்துப் பாடலும் ஜே கோஷமுமாக அமளி துமளிப் பட்டது. அப்போது புளகாங்கிதமும் பரவசமும் அடையாதவர்கள் அந்த மாபெரும் சபையில் யாரும் இல்லை.

வைபவம் இனிது முடிந்து ஜனங்கள் கலைந்தபோது கட்டிடத்தின் வாசலில் சிலர் கவலையுடன் பேசிக் கொண்டிருந்தது காதில் விழுந்தது. "எல்லாம் சரிதான்; வைபவம் அபாரமாக நடந்து விட்டது. எல்லாரும் பத்திரமாய் வீடு போய்ச் சேரவேண்டுமே? பெண்கள் இவ்வளவு பேர் இருக்கிறார்களே?" என்றெல்லாம் பொறுப்பு வாய்ந்த சில பிரமுகர்கள் பேசிக் கொண்டார்கள்.

அன்றிரவெல்லாம் எனக்கும் அதுவே கவலையாயிருந்தது. நடு நடுவே தூக்கத்திலிருந்து தூக்கிவாரிப் போட்டுக் கொண்டு எழுந்து உட்கார்ந்தேன். "ஜாக்கிரதையாக ஜாகைக்கு வந்து சேர்ந்து விட்டோமா?" என்று என்னை நானே கேட்டுக்கொண்டு மறுபடியும் படுத்தேன்.

• • •

**ம**றுநாள் 11உ பொழுது விடிந்தபிறகு, "இனிமேல் சும்மா இருக்க முடியாது" என்றும், கல்கத்தாவைச் சுற்றிப் பார்த்தேயாக வேண்டும் என்றும் ஏகமனதாக முடிவு செய்தோம். பாரதி தமிழ்ச் சங்கத்தின் முக்கியமான நிகழ்ச்சி நிறைவேறி விட்டது. இனிமேல் கொஞ்சம் அபாயத்துக்குத் துணிந்து வெளியே போகலாமல்லவா? எனவே, ஸ்ரீ வி. டி. சாமியைத் தருவித்து எங்கள் விருப்பத்தை வெளியிட்டோம்.

ஸ்ரீ வி. டி. சாமி ரொம்பத் துணிச்சல் உள்ளவர் என்று எல்லாரும் சொல்லியிருந்தார்கள். அவருடன் வெளியில் புறப்பட வேண்டாம் என்றும் எச்சரிக்கை செய்திருந்தார்கள். ஒரு வருஷமாகக் கல்கத்தாவில் நடந்த கலவரங்களின்போது, கலகப் பிரதேசங்களுக்குள்ளே தைரியமாகப் புகுந்து பல தமிழர்களையும் வங்காளிகளையும் அவர் காப்பாற்றிக் கொண்டு வந்து சேர்த்ததாகவும் தெரிவித்திருந்தார்கள். ஆகையால், அவருடன் போனால்தானே எங்களுடைய நோக்கம் நிறைவேறும்?

ஸ்ரீ வி. டி. சாமி உற்சாகத்துடன் எங்களுக்கு கல்கத்தா நகரைச் சுற்றிக் காட்ட ஒப்புக் கொண்டார்.

"கொஞ்சம் அபாயப் பிரதேசங்களையும் எட்டிப் பார்த்தால் தேவலை" என்று நான் சொன்னதற்கு, "அதெல்லாம் முடியாது. அபாயப் பிரதேசங்களின் நடு மத்திக்குத்தான் உங்களை அழைத்துப் போவேன். மற்ற இடங்களுக்குத்தான் நீங்களே போகலாமே? நான் எதற்கு?" என்றார்.

ஸ்ரீ சாமி வண்டி ஓட்ட ஆரம்பித்த பிறகு எங்களுக்கு அபாயத்தைப் பற்றிய கவலையே இல்லாமற் போய்விட்டது. எந்த அபாயம் தான் இந்த அபார வேகத்தைப் பின் தொடர்ந்து வந்து பிடிக்க முடியும்?

சாதாரணமாக ஜனக் கூட்டமுள்ள இடங்களில் ஸ்ரீ சாமி மோட்டார் ஓட்டும் வேகம் மணிக்கு 60 மைல்; கூட்டமில்லாத சாலைகளில் மணிக்கு 90 மைல். அநேகமாகக் கூட்டமில்லாத தெருக்கள் வழியாகவே வண்டியை விட்டுக் கொண்டு போனார். சிற்சில சமயம் வண்டியை நிறுத்தவும் செய்தார். நிறுத்திவிட்டு, "இந்த இடத்தில் சென்ற ஆகஸ்டு மாதத்தில் ஐந்து பிரேதங்கள் கிடந்தன. அதோ அங்கே யெல்லாம் இரத்த வெள்ளம் ஓடிற்று. இதோ தெரிகிற வீட்டை ஆயிரம் பேர் சூழ்ந்து முற்றுகையிட்டார்கள். அதோ அந்தச் சந்திலேதான் பிரசித்தி பெற்ற...... குண்டா இருந்தான். அவனை ஜனங்கள் கொன்று விட்டார்கள்!" என்று இப்படிப் பல ரஸமான விஷயங்களைச் சொல்லிவிட்டு, நிறுத்திய வண்டியை மறுபடியும் விட்டார்! "15உ என்ன நடக்கப் போகிறதோ?" என்ற கவலை சீக்கிரத்திலேயே எங்களுக்குப் போய் விட்டது. 15உ வரையில் உயிரோடிருந்தால் அல்லவா அன்று நடக்கப் போவது பற்றிக் கவலைப்பட வேண்டும்? சாமியின் தயவினால் அப்படிக் கவலைப்பட வேண்டிய அவசியம் நமக்கு ஏற்படாது என்று திருப்தி அடைந்தோம்!

பல மைல் நீளமுள்ள பல வீதிகளின் வழியாகச் சென்றோம். சென்னை சைனா பஜார் போல் ஜே ஜே என்று கூட்டமாயிருந்த தெருக்கள் இப்போது ஒரு வண்டியோ ஒரு மனிதனோ இல்லாமல் காலியாகக் கிடந்தன. கடைகளும் வீடுகளும் மூடிக் கிடந்தன. கல்கத்தா நகரத்தில் காலிலே ஒரு பங்கு இப்படி வெறுமையாகக் கிடக்கிறதென்று தெரிந்தது. ஹிந்துக்களும் முஸ்லிம்களும் கலந்து வசித்த பிரதேசம்தான் இப்படிப் படு சூனியமாகக் கிடந்தது!

கல்கத்தாவில் மற்றொரு பகுதியில் முஸ்லிம்கள் மட்டும் வசித்தார்கள். காரியாம்சத்தில் அங்கே பாகிஸ்தான் ஏற்பட்டிருந்தது. ஹிந்துக்கள் யாரும் அதற்குள் பிரவேசிப்பதில்லை. பிரவேசித்தால் திரும்பி வருவதில்லை.

கல்கத்தாவின் இன்னொரு பெரும் பகுதியில் ஜே ஜே என்று ஒரே கூட்டமும் சந்தடியுமாயிருந்தது. இது ஹிந்துக்கள் வசித்த பகுதி. நகரின் மற்றப் பகுதிகளில் இருந்த ஹிந்துக்களும் இங்கே வந்து விட்டபடியால் அசாத்திய ஜன நெருக்கம். டிராம்களிலும் பஸ்களிலும் கூட்டத்தைச் சொல்லி முடியாது. இந்தப் பிரதேசத்திற்குள்ளே முஸ்லிம்கள் பிரவேசிப்பதில்லை.

ஹிந்து பகுதியின் எல்லையும் முஸ்லிம் பகுதியின் எல்லையும் சந்திக்கும் இடங்களில் அடிக்கடி கலகம் நடக்குமாம். எனவே, அத்தகைய எல்லைப்புறங்களில் கையில் துப்பாக்கி வைத்த போலீஸார் நின்றார்கள். மோட்டார் லாரிகளில் இராணுவ வீரர்களும் காணப்பட்டார்கள்.

இந்தக் காட்சிகளையெல்லாம் பார்த்து விட்டு வீடு திரும்பியதும் ராஜாஜியைப் பற்றி ரொம்பவும் நொந்து கொண்டோம். "இவர் எப்போதும் இப்படித்தான்! வேண்டாத காரியத்திலேயே தலையிடுவார்! வீதியில் போகிற சங்கடத்தை விலைக்கு வாங்கிக் கொள்வார்!" என்று நான் சொன்னேன். அதற்குச் சின்ன அண்ணாமலை "அதெல்லாம் இல்லை. காங்கிரஸ் மேலிடம் என்று சொல்கிறார்களே, அந்த மகான்களுடைய சூழ்ச்சி இது! ராஜாஜியைச் சங்கடத்துக்குள்ளாக்குவதென்று அவர்கள் கங்கணம் கட்டிக் கொண்டிருக்கிறார்கள்!" என்றார்.

இப்படி இருந்த நிலைமையில் காந்தி மகாத்மா வங்காளம் வந்து சேர்ந்தார். கல்கத்தாவுக்கு இருபது மைல் தூரத்தில் உள்ள ஸோதேபூர் ஆசிரமத்தில் தங்கியிருந்தவர், 13௳ யன்று கல்கத்தாவின் மத்தியப் பிரதேசத்துக்கு வந்து சேர்ந்தார். ஹிந்து—முஸ்லிம் எல்லைப் புறத்தில், பலமுறை குத்தும் கொலையும் நடந்த பிரதேசத்தில், ஒரு முஸ்லிம் தனிகர் காலி செய்து விட்டுப் போயிருந்த வீட்டில் மகாத்மா தங்கினார். அவர் தங்கியது போதாமல் அதே வீட்டில் ஜனாப் சுஹ்ராவர்த்தியையும் தங்கச் செய்தார். ஆகஸ்டு படுகொலை, இரத்தக் களரி, நவகாளி அட்டூழியம் முதலியவற்றுக்கெல்லாம் சுஹ்ராவர்த்திதான் பொறுப்பாளியென்பது கல்கத்தா ஹிந்துக்களின் அபிப்பிராயம். எனவே, அவர்களுக்கு மகாத்மாவின்மேல் பிரமாத கோபம் வந்து விட்டது. படை யெடுப்பதுபோல் ஆயிரக்கணக்கான ஹிந்துக்கள் மகாத்மா தங்கிய வீடு நோக்கிச் சென்றார்கள். எதிர்ப்புக் கோஷங்களைச் செய்தார்கள். கல்லை விட்டு எறிந்தார்கள். வீட்டின் கண்ணாடி ஜன்னல்களை உடைத்தார்கள். "உடனே இந்த வீட்டை விட்டு நீங்கள் கிளம்பிப் போக வேண்டும். இல்லாவிடில் மேலே நடப்பதற்கு நாங்கள் ஜவாப்தாரி இல்லை!" என்று எச்சரித்தார்கள்.

மகாத்மா அசைந்து கொடுக்கவில்லை.

14௳ பொழுது விடிந்தது. அன்றும் மறு நாளும் என்ன நடக்குமோ என்ற கவலை எல்லாரையும் பிடுங்கித் தின்றது. கலகத்தையும் ரகளையையும் எதிர்பார்த்து, காயம் பட்டவர்களுக்குச் சிகிச்சை செய்வதற்காகக் கல்கத்தா ஆஸ்பத்திரி ஒவ்வொன்றிலும் 300 படுக்கைகள் 500 படுக்கைகள் என்று தயார் செய்து வைத்திருப்பதாக ஒரு செய்தி வந்தது.

எங்களுக்கு எவ்வளவு குதூகலமாய் இருந்திருக்குமென்று பாருங்கள்!

இப்படிப்பட்ட நிலைமையில், கவர்னர் ராஜாஜி 14௳ பிற்பகல் 3-மணிக்கு டம்டம் ஏரோட்ரோமில் வந்து இறங்கினார். பழைய கவர்னர் பர்ரோஸ், பழைய பிரதம மந்திரி சுஹ்ராவர்த்தி, புதிய பிரதம மந்திரி டாக்டர் கோஷ், கல்கத்தா மேயர் முதலியவர்கள் விமான தளத்துக்குச் சென்று புது கவர்னரை வரவேற்றுக் கல்கத்தாவுக்கு அழைத்துக் கொண்டு வந்தார்கள்.

அன்றிரவு கல்கத்தா நேரம் 1 மணிக்குப் புது கவர்னர் பதவி ஏற்கும் வைபவம் கவர்ன்மெண்ட் மாளிகையில் நடப்பதாக ஏற்பாடு. எனவே, 12 மணி எப்போது அடிக்கும் என்று நாங்கள் ஆவலுடன் காத்துக் கொண்டிருந்தோம். (தொடரும்)

# கல்கத்தா கொண்டாட்டங்கள்



கல்கத்தா பாரதி தமிழ்ச் சங்கத்தில் ஆகஸ்டு மீ 10வ. தலைவர் ராஜாஜியின் படம் ரஸிகமணி டி. கே. சி. அவர்களால் திறந்து வைக்கப்பட்டது. அப்போது...

கல்கத்தா தமிழர்கள் — பெண்மணிகள் புருஷர்கள் எல்லாரும்—அகமும் முகமும் மலர்ந்து ஒரே ஆனந்தத்தில் மூழ்கி யிருந்தார்கள்!

பாரதி தமிழ்ச் சங்கத்
தின் தலைவர் ஸ்ரீ சீதா
பதி அவர்கள் நல்ல
தமிழில் எல்லாருக்
கும் வந்தனம்
அளித்து விட்டு ......



பாரதி மண்டப
நிதிக்காகக்
''கல்கி'' ஆசிரிய
ரிடம் பண முடிப்
பும் அளித்தார்!

* * *

ஆகஸ்டுமீ 14உ நள்ளிரவு சென்றதும், கல்கத்தா கவர்ன்மெண்டு மாளிகையின் பிரதான சபா மண்டபத்துக்குள் புது கவர்னர் ராஜாஜி பிரவேசித்தார்.

* * *

ஹைகோர்ட் நீதிபதியின் முன்னிலையில் விசுவாசப் பிரமாணம் எடுத்துக் கொண்டார்.

* * *





• • •

"கவர்னர் வேலை பார்க்கிறேன்!" என்பதாகக் கையெழுத்துப் போட்ட பிறகு வங்காள மந்திரிகளும் விசுவாசப் பிரமாணம் செய்தார்கள்.

• • •

• • •

பதவி ஏற்கும் வைபவம் சிறப்பாக நடந்து முடிந்த பிறகு தமிழ் மக்களின் சார்பாக ரஸிகமணியின் மங்களவாழ்த்துக்களை ஏற்றுக் கொண்டு மகிழ்ந்தார்.

• • •

ஆகஸ்டு 15உ
யில் 'கவர்ன்மெ
மாளிகை மைத
தில் கொடியே
விழாவுக்காக
யம் செய்த
மேற்கு வங்
மந்திரிகளும் க
நாவின் முக்கிய
முகர்களும் அ
திருந்த பந்த
முன்னால், வெ
முழக்கங்க
ளிடையே.........

இந்தியாவின் சுதந்திரக் கொடியைப் பறக்க விட்டார்! அதே சமயத்தில்...



• • •

கவர்ன்மெண்ட் மாளிகையின் வாசலில் நின்றுகொண்டிருந்த ஆயிரக் கணக்கான ஜனங்கள் அலை மோதும் சமுத்திரத்தைப்போல் உள்ளே வந்தார்கள். அவர்களைத் தடுக்க வேண்டாம் என்று கவர்னரின் கட்டளை பிறக்கவே, சிறிது நேரத்துக்கெல்லாம் சுமார் ஒரு லட்சம் ஜனங்கள் கவர்ன்மெண்டு மாளிகைக்குள்ளேயே பிரவேசித்துவிட்டார்கள்!

• • •



# ஜவாஹரின் நல்வாக்கு





"பாரத நாட்டிலுள்ள ஒவ்வொருவருக்கும் இனி நல்ல உணவும் உடையும் கிடைக்க வேண்டும். ஒவ்வொருவரும் திட ஆரோக்கியத்துடன் இருக்க வேண்டும். அவ்வாறு செய்வதே இனி நமது லட்சியம்."
எதிர்காலக் கண்ணாடி
நாளை இந்தியன் நிலைமை
SHASTRY

# பாரதி மண்டப நிதி

அதிர்ஷ்ட காலம் வருகிறபோது பிரமாதமாகத்தான் வந்து விடுகிறது. மகாகவி பாரதியாருக்கு இப்போது வந்திருக்கும் அதிர்ஷ்டத்தைப் பற்றித்தான் சொல்லுகிறேன். ரஸிகமணி டி. கே. ஸி. அவர்களுடன் சாந்திநிகேதனத்துக்குப் போய் விட்டு வரும் வழியில் கல்கத்தா தமிழர்கள் என்னை மறித்துக் கொண்டார்கள். பாரதி மண்டப நிதிக்குப் பணம் வாங்கிக் கொண்டுதான் போக வேண்டும் என்று வற்புறுத்தினார்கள். கல்கத்தாவில் தமிழர் நடத்தும் ஒவ்வொரு ஸ்தாபனமாக அழைத்துப் பணம் கொடுத்தார்கள். புருஷர்கள் கொடுத்தார்கள்; பெண்மணிகள் கொடுத்தார்கள்; சங்கீத சபையினர் கொடுத்தார்கள்; ஏழை ஆசிரியர்களும் கொடுத்தார்கள்! ஆக மொத்தம் ரூ. 1722—4—0 கல்கத்தாவிலுள்ள தமிழர்கள் பாரதி மண்டப நிதிக்குத் தந்தார்கள்.

பாரதி கைங்கரியத்தில் கல்கத்தா தமிழர்கள் பம்பாய்த் தமிழர்களையும் வென்று விட்டார்கள் என்றே சொல்ல வேண்டும். அவர்களனைவருக்கும் என் மனமார்ந்த நன்றியைச் செலுத்துகிறேன். அவர்களுடைய தமிழன்பையும் பாரதி பக்தியையும் போற்றுகிறேன்.

* * *

சென்ற மாதம் எட்டயபுரத்தில் கோபுரத் திருப்பணியை ஆரம்பித்து வைப்பதற்காக நான் சென்றிருந்தபோது, அருப்புக் கோட்டையில் நாயர் ஹோட்டல் என்று பிரசித்திபெற்ற ஹோட்டலின் சொந்தக்காரர் ஸ்ரீ ஆர். வேங்கடரமணன், எட்டயபுரத்துக்கு வந்திருந்தார். மண்டப கைங்கரியத்தில் விசேஷ சிரத்தையைக் காட்டினார். விடைபெற்றுச் செல்லும்போது "உங்களை விருதுநகர் ஸ்டேஷனில் பார்க்கிறேன்!" என்று சொன்னார். "அவ்வளவு தூரம் சிரமம் எதற்காக? வேண்டாம்! திறப்பு விழாவின்போது இங்கேயே பார்த்துக் கொள்ளலாம்!" என்றேன். "அதெல்லாம் முடியாது! கட்டாயம் உங்களை விருதுநகரில் பார்க்கப் போகிறேன்!" என்று ஸ்ரீ நாயர் பதிலளித்தார். "உம்மை ஒரு கை பார்த்து விடுகிறேன்!" என்று சொல்லும் பாவனையாக இருந்தது.

அதை நான் மறந்தே போய்விட்டேன். சென்னைக்குத் திரும்பும்போது விருதுநகர் ஸ்டேஷன் வந்தது. வெய்யிலுக்காகச் சாத்தியிருந்த ஜன்னல் கதவை தடதட வென்று இடிக்கும் சத்தம் கேட்டது. "கல்கி ஸார்!" "கல்கி ஸார்!" என்ற அலறலும் கேட்டது. ஜன்னல் கதவைத் திறந்து பார்த்தால், நாயர்வாள் இன்னும் சிலரோடு கும்பலாக நிற்கிறார்! அவசரமாக ஒரு பெரிய பையையும் என் கையில் திணிக்கிறார். பையில் வேறொன்றுமில்லை; ரூ. 666 பணந்தான் இருந்தது! மூன்றே நாளைக்குள் நாயர் மேற்படி தொகையை அருப்புக் கோட்டையில் வசூல் செய்து விட்டார். அருப்புக் கோட்டை நகர காங்கிரஸ் கமிட்டித் தலைவர் ஸ்ரீ ஏ. பி. நாராயண மூப்பனார் முதலியவர்கள் ஒத்துழைத்து வசூலித்துக் கொடுத்தார்கள்.

இராஜபாளையத்தையும் அருப்புக் கோட்டையையும்போல், தமிழ் நாட்டில் ஒவ்வொரு ஊரிலும் பாரதி மண்டப கைங்கரியத்துக்குப் பணம் உதவப் பலர் காத்திருப்பார்கள். யாராவது பொறுப்புள்ள இரண்டொருவர் சிரத்தை யெடுத்து வசூலித்து அனுப்ப முன் வர வேண்டும்.

| | | | |
|---|---|---|---|
| கல்கத்தா பாரதி தமிழ்ச் சங்கம் | 1111 | 0 | 0 |
| கல்கத்தா மாதர் சங்கம் | 213 | 0 | 0 |
| கல்கத்தா குரு குஹ கான வித்யாலயம் | 101 | 0 | 0 |
| கல்கத்தா ரஸிக ரஞ்சனி சபை | 100 | 0 | 0 |
| கல்கத்தா நேஷனல் ஹைஸ்கூல் ஆசிரியர்—மாணவர் | 93 | 8 | 0 |
| கல்கத்தா 'கல்கி' ஏஜெண்ட் ஸ்ரீ சுப்பையா பிள்ளை மூலம் | 78 | 12 | 0 |
| ராம் ரேடியோ ஹௌஸ், கல்கத்தா | 25 | 0 | 0 |
| இராமநாதபுரம் இராஜா உயர்தர கலாசாலை மாணவ—மாணவிகளும், ஆசிரியர்களும் | 150 | 0 | 0 |
| "பாரதி மித்திரன்", கராச்சி | 101 | 0 | 0 |
| ஸ்ரீ எம். கிருஷ்ணசாமி பாரதி, அரசியல் நிர்ணய சபை அங்கத்தினர், மதுரை | 101 | 0 | 0 |
| ஸ்ரீமதி ஆர். கிருஷ்ணவேணி, தியாகராயநகர், (ரேடியோ கச்சேரி சன்மானம்) | 65 | 0 | 0 |
| ஸ்ரீ எஸ். வெங்கடேஸ்வரன், ஐ. ஸி. எஸ்., சென்னை | 50 | 0 | 0 |
| ஸ்ரீ பி. பொன்னம்பலக் கௌண்டர், எம். எல். ஏ., வடசேரி | 50 | 0 | 0 |
| ஸ்ரீ பி. சுப்பையா, கொழும்பு (பல அன்பர்கள் நன்கொடை) | 40 | 0 | 0 |

| | | | |
|---|---|---|---|
| ஸ்ரீ அ. வெங்கடேசன், எம். எல்ஸி, அஹமதாபாத் (பல அன்பர்கள் நன்கொடை) | 42 | 0 | 0 |
| ஸ்ரீ பி. ராதாகிருஷ்ணன், ஜெனரல் மர்ச்செண்ட், கச்சிராயபாளையம் | 25 | 1 | 0 |
| ஸ்ரீ எஸ். ஏ. அய்யர், பம்பாய் | 25 | 0 | 0 |
| ஸ்ரீ வி. தங்கவேல், சென்னை | 25 | 0 | 0 |
| ஸ்ரீ வி. சுப்பிரமணியம், 'கல்கி' ஏஜெண்ட், திருச்சி | 25 | 0 | 0 |
| கோயமுத்தூர் சென்ட்ரல் கோவாபரேடிவ் ஸ்டோர்ஸ் சிப்பந்திகள் (ஸ்ரீ ஏ. முத்துசாமி மூலம்) | 25 | 0 | 0 |
| டாக்டர் எம். ஷண்முகவேலு, எல். ஐ. எம்., திருக்கோஷ்டியூர் | 25 | 0 | 0 |
| ஸ்ரீ டி. எஸ். தியாகராஜன், அவுரங்காபாத் | 20 | 0 | 0 |
| ஸ்ரீ நா. கோ. சொக்கலிங்கம், லிங்கம் கம்பெனி, கோயமுத்தூர் | 15 | 0 | 0 |
| ஸ்ரீ பி. ஆறுமுகம், சிந்தாதிரிப்பேட்டை, சென்னை | 13 | 8 | 0 |
| ஸ்ரீ டி. ஆர். ராஜகோபாலன் திண்டுக்கல் | 11 | 0 | 0 |
| ஸ்ரீ சஞ்சீவிராய், ஜின்னிங் பாக்டரி, அவினாசி | 11 | 0 | 0 |
| ஸ்ரீ எஸ். என். ஷண்முகநாதன் கொழும்பு | 10 | 0 | 0 |
| பாரதி அபிமானி | 10 | 0 | 0 |
| ஸ்ரீமதி எம். எஸ். கமலா, திருவல்லிக்கேணி | 10 | 0 | 0 |
| ஸ்ரீ சாத்தூர் சுப்பிரமணியம், சங்கீத வித்வான், திருச்சி | 10 | 0 | 0 |
| ஸ்ரீ ஆர். கிருஷ்ணன் நாயர், ராயபுரம், சென்னை | 10 | 0 | 0 |
| ஸ்ரீ ஜி. சுந்தரம், தலைவர், காங்கிரஸ் கமிட்டி, திருவையாறு | 10 | 0 | 0 |
| ஸ்ரீ ஆர். சூரியநாராயணன், ராயப்பேட்டை, சென்னை | 10 | 0 | 0 |
| ஸ்ரீ எஸ். முருகப்ப செட்டியார், ஜலக்கோடு | 10 | 0 | 0 |
| ஸ்ரீ சி. ஆ. ச. ஆறுமுகச்சாமி நாடார், சிவகாசி | 10 | 0 | 0 |
| ஸ்ரீ என். பி. எஸ். ராமநாதன், சிலோன் | 10 | 0 | 0 |
| ஸ்ரீ ச. ஸ்ரீநிவாசன், செயலாளர், இலங்கை முத்தமிழ் மன்றம், பண்ணை, சிலோன் | 10 | 0 | 0 |
| ஸ்ரீ ஏ. எஸ். கிருஷ்ணசாமி ராஜா, கிருஷ்ணராம் அண்டு கோ., ராஜபாளையம் | 10 | 0 | 0 |
| ஸ்ரீ அ. ப. குருவையா, வத்திராயிருப்பு | 8 | 0 | 0 |
| சேனைத் தலைவர் வாலிபர் சங்கம், சாராச்சி, துறையூர் | 7 | 0 | 0 |
| ஸ்ரீமதி பேயாசனி அம்மாள், இராஜபாளையம் | 6 | 4 | 0 |
| ஸ்ரீ கே. ராம. ஆர். ராமசாமி, வியாபாரம், உச்சிப்புளி | 6 | 0 | 0 |
| ஸ்ரீ பி. சங்கரலிங்கம், திருப்பூர் | 6 | 0 | 0 |
| ஸ்ரீ கே. பாலசுப்ரமணியம், ஸ்ரீ ராமனுஜலயம், திப்பிராஜபுரம் | 5 | 8 | 0 |
| ஸ்ரீ குமரேசன், செச்சிப்பாளையம் | 5 | 0 | 0 |
| ஸ்ரீ சாலியர் வாலிபர் சங்கம், பாலராமபுரம், திருவாங்கூர் | 5 | 0 | 0 |
| ஸ்ரீ ஜி. அச்சுதன் நாயர், கோயமுத்தூர் | 5 | 0 | 0 |
| ஸ்ரீ எம். வி. ஸ்ரீநிவாசன், மைதீன் ரோட்வேஸ், தேனி | 5 | 0 | 0 |
| ஸ்ரீ வெ. பொன்னையா மூப்பனார், சாராச்சி, துறையூர் | 5 | 0 | 0 |
| ஸ்ரீ மா. [illegible]. சுப்பிரமணியம், மிராசுதார், மோகனூர் | 5 | 0 | 0 |
| ஸ்ரீ கே. கே. காடப்பன், உலகம்பட்டி | 5 | 0 | 0 |
| ஸ்ரீ ஷண்முகசுந்தரம் பிள்ளை, எட்டயபுரம் | 5 | 0 | 0 |
| ஸ்ரீ ராமசாமி ராஜா, எட்டயபுரம் | 5 | 0 | 0 |
| ஸ்ரீ பி. கே. வரதராஜுலு செட்டியார், திருச்சி | 5 | 0 | 0 |
| ஸ்ரீ கே. சுப்பய்யா, காரியதரிசி, நேதாஜி வாலிபர் சங்கம், கருமன்பாளையம் | 5 | 0 | 0 |
| ஸ்ரீ வி. எஸ். எம். சாமி, காரியதரிசி, நேதாஜி வாலிபர் சங்கம், சந்தம்பூண்டி | 5 | 0 | 0 |
| ஸ்ரீ எஸ். எஸ். கனகராஜன், கீழ்கூடலூர், மதுரை | 5 | 0 | 0 |
| ஸ்ரீ வி. எஸ். ஆழ்வார் அய்யங்கார், வத்திராயிருப்பு, ராமனுஜபுரம் | 5 | 0 | 0 |
| ஸ்ரீ பி. கே. கிருஷ்ணமூர்த்தி, பாங்க் ஆப் ஹிந்துஸ்தான், சென்னை | 5 | 0 | 0 |
| ஸ்ரீ டி. ஏ. சுந்தரகணபதி, திருவாடானை | 5 | 0 | 0 |
| ஸ்ரீமதி ஜானகி ஸ்ரீகண்டன், திருவல்லிக்கேணி | 5 | 0 | 0 |
| மெஸர்ஸ் சி. ப்ரேம்ஜி சகன்லால் அண்டு சன்ஸ், சேலம் | 5 | 0 | 0 |
| ஸ்ரீ பி. சுப்பிரமணிய பிள்ளை, திருவட்டார், திருவாங்கூர் | 5 | 0 | 0 |
| ஸ்ரீ எஸ். வெங்கடராமன், சித்தூர், சேலம் ஜில்லா | 5 | 0 | 0 |
| ஸ்ரீ மு. கு. இராமசாமி ஆசாரி, கடுக்காய், இராமநாதபுரம் | 5 | 0 | 0 |
| ஸ்ரீ க. பொன்னுச்சாமி, செட்டையூரணி, ராமநாதபுரம் | 5 | 0 | 0 |
| ஸ்ரீ கே. ஆர். ஷண்முகம் பிள்ளை, கல்கி ஏஜெண்ட், திருவாடானை | 5 | 0 | 0 |
| ஸ்ரீ எம். என். ராமாச்சாரி, கஸ்தூரி எம்போரியம், சேலம் | 5 | 0 | 0 |
| ஸ்ரீ எம். பி. வேலாயுத முதலியார் ஜெனரல் மர்ச்செண்ட், கோட்டார் | 5 | 0 | 0 |
| ஸ்ரீ வி. முருகேசன், இண்டியன் மர்க்கெண்டைல் இன்ஷூரன்ஸ் கம்பெனி, நாங்குநேரி | 5 | 0 | 0 |
| ஸ்ரீ ப. சுப்பையா மூப்பனார், சாராச்சி, துறையூர் | 5 | 0 | 0 |
| ஸ்ரீ ச. அ. சுப்பிரமணிய மூப்பனார், சாராச்சி, துறையூர் | 5 | 0 | 0 |
| ஸ்ரீமதி ருக்மணி கோபாலன், [illegible], ஜபல்பூர் | 5 | 0 | 0 |
| ஸ்ரீ பிஎல். எம்ஆர். பிஎல். எம். சேதுராமன், புதுப்பட்டி | 5 | 0 | 0 |
| ஸ்ரீ ஏ. அருணாசலம் பிள்ளை, இணைமணி ஏஜென்டு, வள்ளியூர் | 5 | 0 | 0 |
| ஸ்ரீ கிருஷ்ணதயாநிதி லிமிடெட், சொக்கம்பாளையம் | 5 | 0 | 0 |
| ஸ்ரீ ஓ. எஸ். நாச்சியப்பா, சிலோயன்ஸ் மோட்டார்ஸ், சென்னை | 5 | 0 | 0 |
| ஸ்ரீ ஏ. எஸ். நயினார் ஆச்சாரி, திருச்செந்தூர் | 5 | 0 | 0 |
| ஆக ரூ. | 2870 | 9 | 0 |
| ஏற்கெனவே வரவு ரூ. | 13,887 | 3 | 3 |
| ஆக மொத்தம் ரூ. | 16,757 | 12 | 3 |

# பழமையும் புதுமையும்



நம் முன்னோர்கள் தங்களுடைய பற்களை ஆலமவிழுது, வேப்பங்குச்சி முதலியவைகளால் சுத்தம் செய்துகொண்டிருந்தார்கள்.

தற்காலத்தில் நாம் ரஸாயனசாஸ்திரத்தின் உதவியால் கோலினாஸ் பல்பேஸ்டைக் கொண்டு பற்களை சுத்தசெய்து சுத்தமாகவும் கெட்டியாகவும் வைத்துக்கொள்ள முடிகிறது. ஏனென்றால் கோலினாஸ் நுரை பல் இடுக்குகளில் சென்று பரிசுத்தப்படுத்தி, ருசி, வாய் சுத்தம், யாவற்றையும் இனிமையாக்குகிறது.

# KOLYNOS

கோலினாஸ்
சிக்கனமானது
½ அங்குல பேஸ்ட்
தான் தேவையானது




KI.2 TAM.




உயர்ந்த
ரகம்

INDIA
STERLING
CYCLE
TYRE

குறைந்த
விலை

INDIA STERLING




## மூன்றும் அத்தியாயம்

## கௌரி கல்யாணம்........

பழமாங்குடியில் ஒரே குதூகலம். மாடி வீட்டு ராமஸ்வாமி ஐயங்காரின் ஒரே பிள்ளைக்குக் கல்யாணம் என்றால் கேட்கவா வேண்டும் கூட்டத்திற்கு? பிள்ளை வீட்டுக்காரர்கள் அழைத்தவர்கள், பெண் வீட்டுக்காரர்கள் அழைத்தவர்கள், தங்களைத் தாங்களே அழைத்துக் கொண்டவர்கள் எல்லோரும் வந்திருந்தார்கள். ராமஸ்வாமி ஐயங்காருக்கு ஊரில் எந்தவிதமான விரோதமும் கிடையாது. ஆகையால் எல்லோரும் மனப்பூர்வமாக ஒத்தாசை செய்தார்கள். தங்களுக்கும் இங்கு மங்கும் கொஞ்சம் உதவி செய்து கொண்டார்கள்!

'கன்னு'க் குடுமியோடு நிற்கும் அப்புவிற்கு மட்டும் ஒரு குறை. பந்தலில் எல்லோருக்கும் கொடுத்த எட்டணாக் காசு கூட அவனுக்குக் கொடுக்கவில்லையே? சின்ன காலணாவை வைத்தல்லவா கையைக் கிள்ளி விட்டார்கள்! அது போனால் போகிறது என்றால், சாப்பாடாவது சரியாகக் கிடைத்ததா? கொஞ்சம் தயங்கி நின்றதற்காகத் தன்னைப் பரிமாறச் சொல்லி விட்டாரே, கிட்டா வாத்தியார்! கடைசியில் ஆறி, அவலாய்ப் போன சாதம்தானே கிடைத்தது! பாவம், சாரங்கன் கல்யாணத்திற்காக அவன் எவ்வளவு நாட்களாக நாக்கைத் தீட்டி வைத்துக் கொண்டிருந்தான்!

அப்புவிற்கு வந்த ஆத்திரத்தில் என்ன செய்வதென்று தெரியவில்லை. யாரிடமாவது போய் இந்த அநியாயத்தைச் சொல்லி அழுதால்தான் ராத்திரி தூக்கம் வரும் என்று அவனுக்குத் தோன்றிற்று. நல்லவேளையாக, அதே சமயத்தில் புது ஆசாமி ஒருவர் அப்புவின் முன்னால் வந்து நின்றார்.

"ஸ்வாமி யாரோ தெரியவில்லையே! பெண் வீட்டு மனுஷாளோ?" என்று ஸுஸ்வரமாக ஆரம்பித்தான் அப்பு.

புதிதாக வந்தவரின் முகத்தில் எள்ளும் கொள்ளும் வெடித்தது.

"கல்யாணம் பண்ண வந்துவிட்டாலும், கல்யாணம்! பெரியவாளுக்கு மரியாதை பண்ணத் தெரியாமற் போனால் பேசாமல் இருக்கணும்! இவனை யார் வெத்திலை பாக்குத் தட்டை எடுக்கச் சொன்னது? என்ன ஸ்வாமி, நான் சொல்றது! சரி தானே?" என்று கன்னத்தில் அறைவது போல் ஒரு கேள்வியைப் போட்டார்.

"நீங்க இப்ப சொன்னதைத்தான் நானும் சொல்லணும்னு நினைச்சண்டு இருந்தேன். தங்களுக்கு என்ன அவ்வளவு கோபம்?" என்று அப்பு எரிகிற தீயில் எண்ணெயை விட்டான்.

"பெண்ணின் மாமா ஒருத்தன் இருக்கான், அவன் என்னமோ கேத்திக்குத்தான் சீமையிலேருந்து கோக் குடிச்சாப்போலே இடக்காப் பேசினான்!"

"தங்களுக்கு எல்லோரையும் தெரியும் போலிருக்கு! பெரிய இடம்தானோ?"

"இந்தக் காலத்திலே பணம் இருந்தா எல்லாம் பெரிய இடம்தான். குலம் கோத்ரத்தை யார் விசாரிக்கிறார்கள்? கோபாலன் என்னமோ நல்லவன்தான்......அதை ஏன் இப்போ சொல்லணும்? ஆயிரம் பொய்யைச் சொல்லிஒரு கல்யாணத்தைப் பண்ணி வை என்று சொல்லியிருக்கு......!"

"அப்படிப் பூடகமாச் சொன்னால்......? மனுஷாளைப் பார்த்தால் அப்படி ஒண்ணும் தப்புத் தண்டாவுக்குப் போற வாளாத் தோணலையே!" என்று அப்பு மிகவும் அனுதாபப் படுகிறவன்போல் சொன்னான்.

"அப்பா, அம்மா எல்லாரும் நல்லவாள் தான்......அந்தப் பெண்தான்...ஏன் பெண்ணுத்திலே கல்யாணம் பண்ணவில்லை?"

"அதுதான் எனக்கு அப்பவே தோணித்து. என்னடாது, கும்பகோணத்தான்தானே இங்கே வந்து இவ்வளவு செய்யறான்னு யோசித்தேன்......பெண் என்ன......"

"பார்க்கப் போனா அதுமேலேயும் குத்தம் சொல்றதுக்கில்லை. யாரோ கோபாலனுக்கு அத்தான் பிள்ளையாம்! அவனை ஆத்தோடு வைச்சிண்டிருந்தா......"

புதிதாக வந்த ஆசாமி காரியவாதி. என் தான் மரியாதையைக் காப்பாற்றிக் கொ வதற்குச் சத்தம் போட்டாலும், வந்தை வேண்டாம் என்று சொல்லும் வழக்க அவரிடம் கிடையாது.

"என்ன இங்கே நின்னுண்டு பேசின் இருக்கிறீரே, சம்பாவனை நடக்குற டிருக்கு......!" என்று யாரோ சொன் வுடன் சிட்டாய்ப் பறந்தார்.

அப்புவிற்குத் தான் கேட்டதைத் த சகதர்மிணி விஜயத்திடம் சொல்லாம போனால் தலை வெடித்துவிடும் போலிரு ந்தது. விஜயம் இந்த ரகசியத்தைக் கொ சம் கூட்டியே அவன் காத்தனுரிட காதோடு சொன்னான். அப்புறம் அங்கிருந் பந்தல் கால்கள்கூடச் சொல்ல ஆரம்பித் விட்டன அந்தக் கும்பகோணத்தில் அ படும் கதையை!

"நம்ப ராமஸ்வாமிக்கா போயும் போய இப்படி வரணும்? கர்மம்டா கர்மம்!" என்றார் தலை நரைத்த கிழவர் ஒருவர்.

"கர்மமாவது மண்ணாங்கட்டியாவது ஐயாயிரம் ரூபாயைப் பார்த்துட்டா, கு கோத்திரம் பார்ப்பாளோ?" என்றார் சே



ற்போல் ஐம்பது ரூபாய்க்கு மேல் பார்த்
ராத பிரமுகர் ஒருவர்.

பெண்கள் ஒன்றும் இப்படி யெல்லாம்
நேருமுகமாகப் பேசவில்லே.

“ருக்மணி! கன்னுப் பண்ணினே,
ல்யாணத்தை! என்னே ஒரு வார்த்தை
கட்டிருக்கக் கூடாதோ? உன் அவலத்
மயன் பேச்சைக் கேட்டு ஒரு காரியம்
ண்ணலாமோ?” என்று அதிகாரத்தோடு
கட்டான் எஞ்சினியர் அகமுடையாள் —
வைரத்தோடு, வைர வளே, வைர அட்டிகை
ல்லாம் குலுங்கும்படியாகச் சற்று
ரட்டை காடியாக இருந்த உடலே
சைத்துக்கொண்டே.

“என்ன இருந்தாலும் உனக்கு .இப்படி
ரு மாட்டுப் பெண் வரவேண்டாம்! சாரங்
ன் குணத்துக்கும் அவன் படிப்புக்கும்
டும் பேர் காத்திண்டிருந்தானே,
பண்ணே வச்சிண்டு! போன வருஷமே
சான்னேன்: பேசாமல் என் உடன்பிறக்
ான் பெண்ணேப் பண்ணிக்கோடின்னு...
ன்னே படிக்கணும், வேலேக்குப் போக
னும், அப்படி இப்படின்'னு ஆயிரம்
காடிச்சயே!” என்று அபிநயத்தோடு அங்
லாய்த்தாள் பக்கத்துவீட்டுப் பத்மாஸினி.



சம்பந்தி அம்மாள் காதிலும் விழாமலில்லே இதெல்லாம். அவளேப் பார்த்து ருக்மணி, “இருந்தாலும் இப்படிக் கல்லேத் தூக்கிப் போடுவேன்னு நான் சொப்பனத்திலேகூட நினைக்கவில்லே” என்ருள்.

“நீங்கள் சொல்றது எனக்குப் புரியல்லேயே!” என்ருள் பூமாவின் தாயார்.

“அது என்னமாப் புரியும்? என் மேலே தான் தப்பு. அவசரப்பட்டு ஒன்னும் விசாரிக்க வில்லே.”

“சம்பந்தியம்மா! இதுமாதிரிப் பேசி ளுல் உங்களுக்கு அவமானமா, எனக்கு அவமானமா? என் பெண் ஒரு பாவத்தையும் பண்ணவில்லே. காலு பேர் காலேச் சொன்னுல் நம்பிவிடலாமா? எல்லாம் பகவத் ஸங்கல்பம். தாலியைக் கழுத்தில் கட்டியாச்சு. இனிமே அவள் உங்கள் பெண்” என்று சொல்லும்போது அவள் கண்களில் நீர் பெருகியது.

“இந்த நாடக மெல்லாம் என்னிட்டே பலிக்காது. நான் இருக்கிற வரையிலும் எங்காத்துக்குள்ளே அவள் அடி எடுத்து வைக்கக் கூடாது!” என்று சொல்லிவிட்டு, ருக்மணி உள்ளே போய்விட்டாள்.

ராமஸ்வாமி ஐயங்காருக்கும் சாரங்கனுக்கும் இந்த வதந்தியில் நம்பிக்கையே யில்லே. ருக்மணி, சாரங்கனிடம் தான் கேட்டதற்குக் கொஞ்சம் கூடுதலாகவே சொன் ளுள். அவன் கோபமாகவே, “இந்தக் காலத்திலேயே இப்படித்தான். ஏதோ ஒரு பெண் கொஞ்சம் படித்து விட்டு காலு பேரோடு தாராளமாகப் பழகிளுல், அதைப் பற்றி ஆயிரம் கட்டுக் கதைகளேக் கட்டி விடறதுதான் இந்த ஊரிலே இருக்கிற வாளுக்கு வேலே! நீகூட அவா பேச்சைக் கேட்டு விட்டுப் பேத்தறயே?” என்ருன்.

“ருக்மணி, நீதான் இந்தக் கல்யாணத்தைப் பண்ண வேணும்னு துடியாய் நின்னே! ‘யார் வம்பளக்கிறது என்



"பெண்ணைப் பத்தி'ன்னு சொன்னவா கன்னத்திலே பளார்னு அறையாமே இங்கே வந்து மூக்கைச் சிந்தறயே?" என்றார் ராமஸ்வாமி ஐயங்கார்.

ருக்மணிக்குத் துக்கம் நெஞ்சை அடைத்தது. சாரங்கன் பேரிலும் கோபம் வந்தது. தன்னுடன் சேர்ந்து கொண்டு அவர்களை யெல்லாம் ஊருக்கு அனுப்பி விடுவார்கள் என்று அவன் நினைத்துக் கொண்டிருந்தான், பாவம்!

அந்த நிமிஷத்திலிருந்தே அவள் பூமாவை வெறுக்க ஆரம்பித்தாள்.

## நாலாம் அத்தியாயம்

## பட்டணப் பிரவேசம்

சாரங்கன் பிரஸிடென்ஸி காலேஜில் சேர்ந்து விட்டான். அவன் வைத்தியக் கல்லூரியில்தான் சேரவேண்டும் என்று நினைத்தான். "கெமிஸ்ட்ரி" என்று சொல்லப்படும் ரஸாயன சாஸ்திரத்திலும் நல்ல மார்க்குகள் வாங்கியிருந்தான். ஆனால் தஞ்சாவூர் ஜில்லாவிலிருந்து இரண்டே பேர்களைத்தான் பொறுக்கினார்கள் அந்த வருஷம். சாரங்கனின் துரதிர்ஷ்டம் அவன் மூன்றிலும் வெறுத்த 'ஜாதி விகி யோகம்' அந்த வருஷம் வெகு கடுபுடலாக அமுலிலிருந்தது. அதிகம் வளர்ப்பானேன்? அவனுக்கு இடம் கிடைக்கவில்லை. பிரஸிடென்ஸி காலேஜிலும் இழுப்புத்தான். ஆனால், அவன் ஆங்கில இலக்கியத்தை 'ஹானர்ஸ்' பரீக்ஷைக்குப் பாடமாக எடுத்துக் கொண்டதால் அதிக சிரமம் இல்லை.

சாரங்கன் இதனால் மனச் சோர்வு அடையவில்லை. ஆங்கில இலக்கியத்தில் அவனுக்குக் கொஞ்சம் பைத்தியம் உண்டு. தவிர, இண்டர்மீடியட் வகுப்பு இங்கிலீஷ் உபாத்தியாயர் ஒரு பெரிய இலக்கிய ரஸிகர். அவர் ஆங்கிலக் கவிகளின் அழகை வர்ணிக்கும்போது சாரங்கன் நாவில் ஜலம் ஊறும்! ஆகவே, மேலே மேலே படிக்க வேண்டும் என்ற ஆசை அவனுக்கு எழுந்தது.

சாரங்கன் பட்டணத்திற்குப் புதிது. வெளிப்படையாகப் பட்டணத்திற் கென்று அவன் சூட்டும் கோட்டும் போட்டுக்கொண்டிருந்தாலும், மனதிற்குள் பட்டணத்திலேயே பிறந்து வளர்ந்த பையன்கள் தன்னைப் பட்டிக்காட்டான் என்று பரிகாசம் செய்யப்போகிறார்களே என்று பயந்தான். ஊரிலேயே அவன் குடுமி போய் விட்டது. அவன் தாயார் அன்றையதினம் ஒரு குரல் அழுதே விட்டாள் ...... பாவம்! அவளுக்குப் பெண் குழந்தை கிடையாது. சாரங்கனுக்குத் தலைமயிர் நீளமாயிருக்கும். அதை அழகாகப் பின்னிப் பூ வைத்து விடுவாள். பள்ளிக்கூடத்தில் பையன்கள் சாரங்கனைக் கேலி செய்வார்கள்; அதற்காக அம்மாவிடம் சாரங்கன் தலையைப் பின்னிவிட வேண்டாமென்று கெஞ்சிக் கேட்டுக் கொள்வான். ஆனால், அவன் அம்மாவா கேட்பவள்? "நன்னாயிருக்குடா! அதுகளுக்கெல்லாம் பின்னிவிடறதுக்கு ஒருத்தரும் இல்லே, அதுதான் தலையைப் பிடாரி மாதிரி வைச்சண்டிருக்கு! அவாள் எல்லாம் காது காலைக்குச் சிரிப்பா, அப்புறம் எல்லாம் சரியாய்ப் போய்விடும்!" என்று சொல்லி விடுவாள். அதற்குப் பிறகு சாரங்கன் எல்லாப் பையன்களுக்கும் முன்னாலேயே பள்ளிக்கூடத்திற்குச் சென்று, பக்கத்து வாய்க்கால் மதகில் உட்கார்ந்து, தாயார் பின்னிவிட்ட தலையை அவிழ்த்துக் கொள்வான். வீட்டிற்குத் திரும்பி வரும் போதும் அப்படித்தான். எங்கேயாவது ஒளிந்துகொண்டு மறுபடியும் பின்னிக் கொள்வான். இது தகப்பனாருக்குத் தெரிந்தது. அவர் பையன்மேல் பச்சாதாபப் பட்டுத் தன் மனைவியை இனிமேல் சாரங்கனுக்குத் தலையைப் பின்னிவிட வேண்டாமென்று சொல்லிவிட்டார். சாரங்கனின் தாயாரும் முணுமுணுத்துக் கொண்டே அதற்குச் சம்மதித்தாள். ஆனால், அவன் தலையை வாரி விடும்போதெல்லாம், "இன்னிக்கு மட்டும் பின்னிக்கோயேன்!" என்று கொஞ்சம் அதட்டியும், கொஞ்சம் கொஞ்சம் பாவனையிலும் கேட்பாள். "அம்மா, வேண்டாம் அம்மா!" என்று சாரங்கன் அலறுவான். பிறகு 'இண்டர் மீடியட்'டில் சேர்ந்தவுடன் அவன் குடுமியும் போயிற்று. அவன் தாயார் அவனோடு [illegible] கைந்து நாட்கள் பேசவே யில்லை!......

சாரங்கன் ஹாஸ்டலில்தான் இருந்தான். அந்த புதிதில் சிகரெட் பிடிப்பதைப்போல் கெட்ட வழக்கம் கிடையாது என்று அவன் நினைத்துக்கொண்டிருந்தான். இதை அடித்துச் சொல்லியிருந்தால் எல்லோரும் பயந்து கொண்டு அவனைத் தனியே விட்டிருப்பார்கள். சங்கோசத்தால், "இல்லை, ஸார்! வழக்கமில்லை!" என்று சொல்லிக் கொண்டிருந்தான், சிகரெட்டை நீட்டும் நண்பர்களிடம். ஆனால் அவர்களா இவனை விட்டு விடுவார்கள்? அந்த நல்ல வழக்கத்தை வெகு சீக்கிரத்திலேயே அவனுக்குக் கற்றுக் கொடுத்து விட்டார்கள்!

ஆனால் சாரங்கனின் நவநாகரிக வாழ்க்கை சிகரெட்டோடும்தான் நின்றது. அவன் வகுப்பில் ஐந்தாறு பெண்கள் படித்துக் கொண்டிருந்தார்கள். அவர்களைச் சாரங்கன் தினமும் கவனிப்பான். அவனையும் இன்னொரு பையனையும் தவிர — அவன் பெயர் ராஜூ — எல்லோரும் அவர்களிடம் சகஜமாகவே பழகினார்கள்.

சாரங்கன் வகுப்பில் முதல் பெஞ்சியில் உட்கார்ந்து கொள்வான். பின் பக்கத்தில் உட்கார்ந்திருப்பவர்கள் அவனை என்ன பரிகாசம் செய்தாலும் தெரியாதல்லவா? ஆனால் முதல் பெஞ்சியில் உட்காருவதினால் ஏற்படும் அசௌகரியம் சாரங்கனுக்கு வெகு சீக்கிரத்திலேயே தெரிந்துவிட்டது. உபாத்தியாயர்களுக்கு—அதுவும் ஒன்பதாம் நூற்றாண்டில் ஆங்கிலேயர்கள் பேசிக் கொண்டிருந்தார்களே, 'ஓல்ட் இங்கிலீஷ்' என்னும் பாஷை, அதைக் கற்பிக்கும் ப்ரொபஸர் பிண்டர் பெக்கிற்கு — மறதி அதிகம். "நேற்று எங்கே நிறுத்தினோம், மிஸ்டர் கிருஷ்ணமூர்த்தி?" என்று சாரங்கனைப் பார்த்து அவர் கேட்பார். (அவரிடம், பத்து வருஷங்களுக்கு முன் கிருஷ்ணமூர்த்தி என்று வெகு கெட்டிக்காரப் பையன் ஒருவன் படித்தானாம். அந்த ஒரு பையன் பெயர்தான் அவர் ஞாபகத்திலிருந்தது. அதிலிருந்து அவர் எந்தப் பையனையும் கிருஷ்ணமூர்த்தி என்று கூப்பிடுவது வழக்கம்.) சாரங்கனுக்கு ஏற்கெனவே உதைப்பு; அதுவும் 'ஓல்ட் இங்கிலீஷ்' உச்சரிக்க வேண்டுமே என்று நினைக்கும் போதே அவன் உடலெல்லாம் வியர்க்கும். தப்பும் தவறுமாக முதல் நாள் நிறுத்தின இடத்தை வாசிப்பான். வகுப்பில் எல்லோருக்கும் தாங்கள் மகாமேதாவிகள் என்ற அபிப்பிராயம். 'ஹொஹொ' என்ற அதிகப் பிரசங்கிச் சிரிப்புச் சிரிப்பார்கள். சாரங்கன் சொல்லிக் கொள்ளாமல் ஊருக்கு ஓடிவிடலாமா என்றுகூட நினைப்பான்.

மாலை வேளைகளில் சாரங்கன் கடற்கரைக்குப் போவது வழக்கம். அன்றைய தினம் அவன் அதிக மனச் சோர்வுடன் இருந்தான். வருஷா வருஷம் வகுப்பில் படிப்பவர்களின் வயது என்ன, அவர்கள் தகப்பனாரின் வருஷ வரும்படி என்ன, பையன்களில் எவ்வளவு பேருக்குக் கல்யாணம் ஆகியிருக்கிறது என்று ஒரு 'ஸென்ஸஸ்' எடுப்பது வழக்கம். அன்றைய தினம் உபாத்தியாயர் மிகுந்த ஹாஸ்ய உணர்ச்சியுடன் இந்த வேலையைச் செய்தார்.

"பெண்களைக் கேட்பதற்கு மன்னிக்கவும் ...... (வகுப்பில் இசைக்கேடாக எதையாவது கேட்கப் போகிறாரோ என்ற பயத்தினால் விபரீதமான நிசப்தம்) ... கிரமாக உங்கள் வயது என்ன?"

ஒரு பெரிய பாரம் தலையிலிருந்து இறங்கியது போலிருந்தது வகுப்பிலிருந்தவர்களுக்கு. உபாத்தியாயர் விகடம் என்றால் கேட்கவும் வேண்டுமா? மண்டபம் இடிந்து விழும்படியான சிரிப்பு. நாணிக் கொண்டும், கோணிக்கொண்டும் பெண்கள் தங்கள் வயதைக் கூட்டியோ குறைத்தோ சொல்லிக் கொண்டார்கள்.

"எனக்குக் கல்யாணம் ஆகிவிட்டது, பயப்படாதீர்கள்! உங்களில் எவ்வளவு பேருக்குக் கல்யாணம் ஆகிவிட்டது? இந்த வருஷம் முடிவதற்குள் கல்யாணம் செய்து கொள்ளப் போகிறவர்களும் சொல்லி விட்டால் தேவலை!" என்று சொல்லிக் கொண்டே உபாத்தியாயர் குறிப்பாகக் கிருஷ்ணகுமாரி என்ற பெண்ணையும் ராஜூவையும் பார்த்தார்.

சாரங்கனைத் தவிர ஒருவருக்கும் கல்யாணம் ஆனதாகத் தெரியவில்லை. சாரங்கனும் முதலில் எழுந்திருக்கவில்லை. ஆனால் பொய் சொல்லிப் பழக்கமில்லாததால் கடைசியில் எழுந்திருந்து சொல்லி விட்டான்.

"என்னப்பா, உனக்கு நல்ல பெண் ஒன்று பார்த்து வைத்திருக்கேன், ஊரிலேயே கல்யாணம் பண்ணிக் கொண்டு வந்துவிட்டாயே? உன் பெண்டாட்டிக்கு மாப்பாச்சி வாங்கிக் கொடுத்துவிட்டு வந்திருக்கிறாயா?" என்று உபாத்தியாயர் கேட்கவும், பையன்களின் உற்சாகத்திற்கு அளவேயில்லை. சாரங்கனின் மன நிலையைப் பற்றி அதிகம் சொல்லத் தேவையில்லை. நான்கு மணிக்கே பீச்சுக்குப்

போய் விட்டான். காற்றின் வேகமும் அலை ஓசையும் அவன் மன வேதனையை ஒருவாறு மாற்றின. சாயந்திரம் ஆறு மணி இருக்கும். அறைக்குத் திரும்பலாம் என்று புறப்பட்டான். பைக்ராப்ட்ஸ் ரோட் முனையில் ஒரு கார் நின்று கொண்டிருந்தது. சாரங்கன் அதை உற்றுப் பார்க்கவில்லை. இருந்தாலும் அதில் உட்கார்ந்து கொண்டிருந்தது கிருஷ்ணகுமாரி என்ற தன் வகுப்பில் படிக்கும் பெண் என்பதை அறிந்து கொண்டான். "பணக்கார வீட்டுப் பெண்தான் போலிருக்கிறது. இவர்களெல்லாம் படித்து என்ன செய்யப் போகிறார்கள்? ஏழைகள் படித்தாலும் ஏதாவது உத்தியோகம் பார்த்துக் குடும்பத்தை முன்னுக்குக் கொண்டு வரலாம்" என்று நினைத்தான். அப்போதுதான் ராஜு என்ற அவன் வகுப்புப் பையனும் சாரங்கன் எதிரே வந்து கொண்டிருந்தான். சிந்தனை உலகத்திலிருந்து சாரங்கன் ரோட்டின் நடுவிலே அலக்ஷியமாக நடந்து கொண்டிருந்தான். ராஜு வந்த வேகத்தில் அவன் மீது மோதிக்கொண்ட போதுதான் சாரங்கனுக்கு உலக ஞாபகம் வந்தது. "ஐ ஆம் ஸாரி!" என்றான், அப்பொழுதும் எதிரே வந்தது யார் என்பதைக் கவனிக்காமலே!

"ஓஹோ, நீங்களா! என்ன ஞாபகமோ? நல்ல வேளை, மோதிக் கொண்டது நான்தான். கிருஷ்ணகுமாரியின் காராயிருந்தால்......" என்று இழுத்தான் ராஜு.

ராஜு பேசிக்கொண்டிருக்கும்போதே, அவனைப் பார்த்துவிட்ட கிருஷ்ணகுமாரி காரை அந்தப் பக்கம் திருப்பிக்கொண்டு வந்து விட்டாள்.

"என்ன ராஜு, என்னைப் பற்றித்தானே பேசிக்கொண்டிருக்கிறீர்கள்! மிஸ்டர் சாரங்கன், அவர் சொல்வதை நம்பாதீர்கள்! நான் ரொம்பப் பேசுவேன் என்றுதானே சொல்லிக்கொண்டிருந்தார்?" என்று விடாமல் அவள் பேசிக்கொண்டே போனாள்.

"மிஸ்டர் சாரங்கன்!" என்றதும் சாரங்கனுக்குத் தூக்கிவாரிப் போட்டது. தன் பெயரை இந்தப் பெண் ஞாபகத்தில் வைத்திருக்கிறாளே? நல்ல வேளை, உலகத்தில் எல்லோரும் ப்ரொபஸர் பிஸ்டர்பெக் மாதிரி இல்லையே!

சாரங்கன் ஒரு அசட்டுச் சிரிப்புச் சிரித்தானே தவிர ஒன்றும் பேசவில்லை. அவனுக்கு 'வக்காலத்து' வாங்கிக்கொண்டு ராஜுதான் பேசினான். "நான் உன்னைப் பற்றிப் பேசிக் கொண்டிருந்தது வாஸ்தவம்தான். நிஜமாகச் சொல்லு, உன் காரை யாரோ யமதர்ம ராஜாவின் வாகனம் என்று சொன்னார்களாமே!" என்றான்.

கிருஷ்ணகுமாரிக்கு முகம் கொஞ்சம் சிவந்தது, "என் காரைச் சொல்லுவானேன்? என்னைப் பார்த்துச் சொல்லுங்களேன், எருமை மாடு மாதிரி இருக்கிறேனென்று!" என்றாள்.

"அம்மம்மா! அதுமாதிரியெல்லாம் சொல்லுகிறேனென்று தெரிந்தால் ஊரி இருக்கிற எருமை மாடுகள் எல்லாம் நா அவைகளைப் பற்றி அவமதிப்பாகப் பே விட்டேன் என்று என்னை முட்டிக் கொன் விடும்.........சரி, அது போகட்டும்..... உன்னை எத்தனை நாழி தேடுகிறது? இ தான் மணி ஐந்தோ?"

"வரும்போது ஒரு ஆக்ஸிடெண்ட்..."

"அதுதான் நான் உன் காரை யமதர்ம ராஜனின் வாகனமென்று சொன்னவுடன் உனக்கு அவ்வளவு கோபம் வந்ததோ?"

"மிஸ்டர் ராஜு, உங்களுக்குத் தெரிந்த விஷயம் அது ஒன்றுதான் என்று இவ்வளவு சீக்கிரம் காண்பித்து விட்டீர்களே? 'ஆக்ஸிடெண்ட்' என்றால் என் காரால்தான் ஆக வேண்டுமா? ரோட்டில் மிலிடெரி லாரி மரத்தில் மோதிக் கொண்டதாம்......"

"இத்தனை நாள் மனுஷர்களுக்குத்தான் ஆபத்து என்று நினைச்சேன்......மரத்துக்கும் வந்து விட்டதா?"

"பேசும்போது குறுக்கே விழாதீர்கள்! ரோட்டைத் தாண்ட முடியவில்லை. சுற்றிக் கொண்டு வரவேண்டியிருந்தது. ஆறரை மணிக்குத்தானே ஷோ? இப்போது கிளம்பினாலும் போய்விடலாம்."

சாரங்கனுக்குத் தான் அங்கு நிற்பது உசிதமல்ல என்று பட்டது. "நான் வருகிறேன்" என்று சொல்லிக் கிளம்ப யத்தனித்தான்.

"அடே, நான் சொல்வதற்கு முன்னே நீங்களே சொல்லி விட்டீர்களே! வாங்கோ, வாங்கோ! காரிலே நிறைய இடம் இருக்கிறது!" என்று சொல்லிக் கொண்டே சாரங்கனைப் பலவந்தமாக உள்ளே தள்ளினான் ராஜு. கார் 'பாரகான்' சினிமாவை நோக்கிப் பறந்தது. கிருஷ்ணகுமாரி மோட்டார் விடும் முறை, பலருக்குக் கடவுளின் மேல் மனதைத் திருப்பினாலும் கார் பத்திரமாக வே சினிமாவுக்கு வந்து நின்றது. (தொடரும்)

# அழகும் விதியும்

சிவகாமு



"வச்சன், வச்சன், எழுந்திருடீ! மணி மூணு அடிக்கப் போகிறது; எழுந்து தலை பின்னிக்க வாடீ! அப்புறம் குளிக்கிறதன்னு உனக்கு இரண்டு மணி 'தேசாலம்' வேணுமே! எழுந்திரு, எழுந்திரு!" என்று இரைந்து கொண்டே அரைத் தூக்கமும் விழிப்புமாக இருந்த என்னை என் தாயார் குலுக்கினாள். எனக்கோ, ஒரே எரிச்சலும் கோபமுமாக வந்தது. வெய்யில் ஒரு பக்கம் பதை பதைக்கக் கொளுத்துகிறது; இறக்கம் வேறு புழுக்கித் தின்னும் இந்த அவந்தர வேளையில் நான் 'டிரஸ்' செய்து கொண்டு ஆறு மணிக்கோ, எழுமணிக்கோ வரப்போகும் 'பிள்ளையாண்டான்' முன் போய் நிற்க வேண்டுமாம்!

நான் சீக்கிரம் எழுந்திருக்காததைக் கண்டு, "என்ன தூக்கமடி இது! நான் அப்பொழுதே வாங்கிக் கொள்கிற புடவையை 'லேட் கல'ரில் வாங்கிக்கோ

மன்னு பத்து தடவை முட்டிண்டேன்; கேட்டால் தானே! உன் கிறுக்குக்கும் நீ வாங்கிக் கொண்டிருக்கிற அந்த 'டார்க் கலர்' புடவைக்கும் எப்படித்தான் இருக்கப்போகிறதோ? எதடா, பெரியவா, வயசானவா சொல்றேளென்னு 'லவலேசம்' லட்சியம் செய்யணுமே, ஊஹூம், கிடையாது!''

"அப்பப்பா, இதே பெரிய சோதனையாய்ப் போயிடுத்து, இந்த வீட்டிலே! எப்பப் பார்த்தாலும் இதே பேச்சுத்தானா? இந்த வேஷமும் நாடகமும்...வர வர சகிக்கிறது!'' என்று எனக்கு வந்த கோபத்தில் கத்தினேன்.

பின் எனக்குக் கோபம் வருமா, வராதா? ஒரு தடவையா, இரண்டு தடவையா? தை மாதம் ஆரம்பித்தால் ஆவணி முடிய வீட்டில் இதே பெரிய பாடாகி விட்டது. எனக்கு என்னமோ புருஷன்னு இனிமேலா ஒருவன் பிறக்கப் போகிறான்? ஏன் இதற்கு இவ்வளவு ஆதங்கம்?

"இவ்வளவு அகங்காரம் இருந்தால் வெடிஞ்சாப்பிலே தான்! அப்பனைப் போல ரூபம் தான் இருக்குன்னா, 'அதனு'டைய ஆங்காரமும் எங்கே போயிடும்?'' என்று அங்கலாய்த்தாள் என் தாயார்.

"அப்பாடா! இதோ எழுந்துட்டேன், நீ போகலாம்'' என்று வெறுப்புடன் சொல்லிக் கொண்டே நான் எழுந்த பிறகு தான் அம்மா அந்த இடத்தை விட்டு நகர்ந்தாள்.

## 2

என் தாயாரைப் பற்றி நினைக்கும் பொழுது தான் உலகம் பலவிதம் என்பதின் அர்த்தம் எனக்கு வெகு விசித்திரமாகத் தெரிகிறது. எந்தத் தாயாருக்காவது தன் ஒரே பெண்ணின் மீது மனவெறுப்பு இருக்க முடியுமா? இயற்கைக்கு மாறாகத் தான் என் தாய் என்னிடத்தில் நடந்து கொண்டாள், ஓரளவு. அவ்வளவுக்கு நான் என்ன தீங்கு செய்து விட்டேன் என்று பார்த்தால் ஒன்றுமில்லை; தவறு என்னவும் என்மீது இல்லை. கடவுளுடைய படைப்பு அப்படி! நான் என் தகப்பனாரைப் 'போலி' விட்டேனாம். அதுதான் என் தாயாருக்கு என்னைக் கண்டால் மனக்கஷ்டம். அதற்கு நான் என்ன செய்வது?

என் தாயார் என்னைப் பற்றி மனதில் நினைத்துக் கொண்டபடி நான் அழகில்லாதவள் இல்லை. என் எடுப்பான மூக்கும், ஒழுங்கான பல் வரிசையும், கதுப்பான கன்னங்களும், சாட்டை போன்ற பின்னலும் .........சொல்லிக் கொள்ள வெட்கமாகத்தான் இருக்கிறது. இரட்டை நாடி சரீரமென்றாலும் பருமன் தெரியாதபடி உயரமாகவே இருந்தேன். ஆனால் என் தாயாருக்கு—அவளுடைய பெண் உள்ளத்துக்கு — என் அழகு அழகாகப்



படவில்லை; விகாரமாகப் பட்டு மனதில் அதே நிலைத்து விட்டது.

அதனால் என் தாயார் என்னைப் படுத்தி வைத்த பாடுகள் ஒன்றா, இரண்டா? 'வரலக்ஷ்மி' என்று என் தகப்பனார் இட்ட அழகான பெயரை ரூபமே தெரியாதபடி 'வச்சன்' என்று மாற்றிவிட்டாள். என் முகத்துக்கு நேர் வகிடு பொருத்தமாக இருந்தது; ஆனால் நான் நாகரிகப் பாங்காக இருக்க வேண்டும் என்று கோணை வகிடு எடுத்து வாரிவிட்டாள். என் பாட்டி — அவளுடைய மாமியார் — என்னுடைய ஐந்தாவது வயதில் மூக்குக் குத்தினாள், வைர பேஸரி போட்டுப் பார்க்க வேண்டுமென்று. ஆனால் அவளுக்குக் கொடுத்து வைக்கவில்லை. அவளுடைய தலை மறைந்ததும் குத்தின மூக்கைத் தூர்த்திட்டு மறு காரியம் பார்க்கச் சொன்னாள். எனக்கு எப்பொழுதுமே நல்ல இலைப் பச்சை, ரத்தச் சிவப்பு, சுத்தக் கறுப்பு — இம்மாதிரி ஆடைகள் அணிந்து கொள்ளப் பிரியம் அதிகம். ஆனால் எதுவும் 'லைட் கல'ரிலேயே வாங்கிக்கொள்ள வேண்டுமென்று அம்மா சண்டைபிடுவாள். எனக்கு எவ்வளவோ ஆசை வீணை கற்றுக் கொள்ள வேண்டுமென்று. ஆனால் அது நிறைவேறவில்லை. அவளுடைய பிடிவாதத்திற்காகப் பிடில் கற்றுக் கொண்டேன். இப்படி நான் சுதாவாக எதையும் செய்ய முடியாது! செய்யவும் அம்மா அநுமதிக்க மாட்டாள்!

3

இதெல்லாமாவது போகட்டும்; மனதின் கோளாறு என்று தள்ளி விடுகிறேன்.



ஆனால் மிகவும் விவேகமாக நடந்து கொள்ள வேண்டிய அநேக விஷயங்களில் அவளுடைய குணமே மாறுபட்டு இருக்கிறது. என் தகப்பனாரை இழந்து இந்தப் 'பெண் பேதை'யிடத்தில் என் வாழ்வின் சூத்திரக் கயிறு அகப்பட்டுக் கொண்டது விதியின் விளையாட்டு என்றுதான் சொல்ல எனக்கு வாய் வருகிறது.

என் தாயாருடைய முயற்சியாலோ, என் உறவினருடைய தூண்டுதலினாலோ எவராவது பெண் பார்க்க வந்து சேருவார்கள். அதுவும் மணமகனும் அவனுடைய தாயாரும் வந்துவிட்டால் அவர்களிடத்தில் இதுதான் பேசுவது—என்னைப் புகழுவது என்ற பாவனை! — பேசக்கூடாது என்கிற விவஸ்தையே இல்லாமல் போய்விடும். 'உக்கிராண அறை'யில் பலவித சாமான்களின் வாசனையைப் பிடித்துக்கொண்டு, 'கொட்டு கொட்டு' என்று உட்கார்ந்து கொண்டிருக்கும் எனக்குச் சிரிப்பு ஒரு பக்கமும் எரிச்சல் ஒரு பக்கமுமாக வரும்!

"என்னவோ அப்பா, இருப்பது அவள் ஒரு பயிர்தான்! 'அவர்' இருந்து இந்தக் காரியத்தை யெல்லாம் நடத்திப் பார்க்காமல் என் காலில் கட்டிவிட்டுப் போய் விட்டார். நானும் அவளுக்கு அப்பன் இல்லையே என்கிற குறையில்லாமல் 'வேணு'கள் செய்து வைத்திருக்கிறேன். 'கான்வென்ட்'டில் படிக்க வைத்தேன்; வீட்டில் ஸம்ஸ்க்ருதமும் பிடிலும் சொல்லிக் கொடுக்க ஏற்பாடு செய்தேன். ஏதோ என் குழந்தை என்று சொல்லிக் கொள்வதாக நினைக்கவேண்டாம்; அவளுடைய பள்ளிக்கூடத்தில் சாகுந்தலம் டிராமா போட்டதில் இவள் மெடல்கூட வாங்கியிருக்கிறாள். அவளுக்கு இன்னும் மேலே படிக்கவேண்டும் என்கிற ஆசைதான். நான் தான் பலவந்தமாக நிறுத்தி விட்டேன். நான் நிறுத்தினதில் 'கான்வென்ட்' உபாத்தியாயினிகளுக் கெல்லாம் என்மீது கோபம். பிடிலும் நன்றாக வாசிக்கிறாள். 'லேடீஸ் க்ளப்' வருஷாந்தரக் கொண்டாட்டத்தில் இவள் வாசிப்பைக் கேட்டு வந்திருந்த அவ்வளவு பேரும் மூக்கில் விரலை வைத்தார்கள். பெருமைக்காகச் சொல்லிக் கொள்ளவில்லை இவ்வளவும்! படிப்பில்தான் இப்படி என்றால் வீட்டு வேலைகளிலும் அப்படியேதான். ஒரு நிமிஷம் வீண் பொழுது போக்காமல் பம்பரம்போல ஓடி ஆடிக் குடித்தனப் பாங்காக வேலை செய்வாள். அவளுக்கு விவரம் தெரிந்த பிறகு இன்னும் என்னைக் காப்பி போட விட்டதில்லை! என் கை வேலையைப் பார்த்துக் கொண்டு ஒரு நிமிஷம் உட்கார்ந்து கொண்டிருக்க மாட்டாள். அவளுடைய சமையல் திவ்யமாக இருக்கும். நானும் சமையலில் கெட்டிக்காரி என்றுதான் பெயர் வாங்கியிருக்கிறேன். ஆனாலும் அவள் செய்கிற மாதிரி சில பதார்த்தங்களை நான் எங்கும் சாப்பிட்டதில்லை. மனுஷான்னா குறை இருக்கும்; இருந்தாதான் தீரும். அப்படிப் பார்த்தால் அவள் கொஞ்சம் மாநிறம்; அவள் 'அப்பா'வைப்போல இரட்டை நாடி சரீரம்; இதைத்தான் குறை என்று சொல்லலாமே ஒழிய......" என்று இதே ரீதியில் அவள் பேசிக்கொண்டு போவதைக் கண்டால் வந்தவர்களுக்கு என்ன தோன்றும்?

இப்படி வழவழ வென்று சம்பந்தா சம்பந்தமில்லாமல் வார்த்தைகளைக் கொட்டிக் கொண்டேயிருந்தால் எந்த வரன்தான் குதிரும்? இதில் ஏதோ சூது இருக்கிறது என்றே வித்தியாசமாக நினைத்துக் கொண்டார்கள். எனக்கு அங்க ஹீனமோ, என்னமோ என்று கழுகுப் பார்வையுடன் பார்த்தார்கள்!

சொன்னால் சிரிப்பீர்கள். ஒரு தடவை ஒரு பிள்ளையாண்டானுடைய தமக்கை எனக்குக் காது சரியாகக் கேட்கிறதா என்கிற சந்தேகத்தை நிவர்த்தி செய்து கொள்ள என்னிடம் வந்து மெதுவாக என்னமோ கேட்டாள். புது மனுஷாளிடம் பேச வேண்டுமே என்கிற சங்கோசத்துடன் என் முகம் குப்பென்று சிவந்துவிட நான் பேசாமல் நின்று விட்டேன். அதைக் கொண்டு நான் செவிடு என்றே அவள் ஊர்ஜிதம் செய்து கொண்டு விட்டாள். அதற்குமேல் பேச்சே எடுக்காமல் போய் விட்டார்கள், அந்தப் புண்ணியாத்மாக்கள்! கதை எப்படி? இப்படி அதிகப் புகழ்ச்சி யானது நல்ல சமயத்தில் விபரீத பலனைத் தரும் என்ற உண்மையை என் தாயாரிடம் நான் எத்தனை முறை சொன்னாலும் பலன் கிடைத்தால்தானே?

## 4

ஆள் கட்டும் பணப்பெருக்கும் உள்ளவர்களுடைய விஷயமே அலாதி. இதோ கோடி வீட்டு ராஜத்தைத்தான் எடுத்துக் கொள்வோமே! நானும் அவளும் ஒரே சகாதான். பார்க்கப்போனால் என்னைவிட ஆறு மாதம் பெரியவள்; தேகம் மட்டும் காத்திரமாக இல்லை. வயதுக்குத் தகுந்தபடி அழகு என்று சொல்ல முடியாது. மூக்குக் கண்ணாடியைக் கழற்றிவிட்டு முகத்தைப் பார்த்தால் ஓரளவு கோரமாகக்கூடத் தென்படும்! ஆனாலும் செலுலாய்ட்—தங்கப் 'பிரேம்' போட்ட மூக்குக் கண்ணாடியை மாட்டிக் கொண்டதும் அவளுடைய முகத்தில் ஒரு அழகு தானே வந்து விடுகிறது. போதாக்குறைக்கு நல்ல சிவப்பு; கன்ன கட்டும் 'பவுடர்'ஆக போட்டுக் கொண்டிருக்கிறாள்; பாவாடைக்கும் மேலாக்குக்கும் பஞ்சமில்லை; எல்லாம் போக மூன்று மாமன்மார்கள், நாலு சித்தப்பாக்கள், அவர்களுடைய பரிவாரங்கள்—இவ்வளவு ஆள் கட்டு இருக்கிறது. பெரிய பிரம்மாண்டமான பங்களாவும், வாசலிலே 'போர்ட் கார்' நிற்கிறதையும் பார்த்தால் எந்தப் பிள்ளையாண்டான்தான் மலைக்க மாட்டான்?

இல்லாவிட்டால், நானும் ராஜமும் அன்று ஜோடியாகத்தானே நின்றுகொண்டு இருந்தோம்! எங்கள் இருவரையும் முதல் முதலாகப் பார்த்த ரகுவுக்கு ராஜத்தின்

மேல் என் கண் விழுகிறது? காணுவது இடக்கிறேன்; கலியாணக் கூட்டத்தில் எத்தனை பெண்கள் இருக்கவில்லை? அவ்வளவு பேரிலும் ராஜம்தான் அழகு! அழகு என்பதற்கு அர்த்தமே யில்லை; வியவஸ்தையும் இல்லை!

ரகுவை அதற்குமுன் எனக்குத் தெரியாது. ராஜத்துக்கும் தெரிந்திருக்க நியாயமில்லை. முதலில் நாங்கள் இருவரும் இணை பிரியாமல் அங்கு மிங்குமாக நடமாடிக் கொண்டிருக்கும்பொழுது, அவன் அடிக்கடி எங்கள் கண்ணில் பட்டது எங்களுக்கு— எனக்கு — வித்தியாசமாகப் படவில்லை. ஆனால் இரண்டாம் நாள் அவன் எப்பொழுதும் எங்கள் எதிரிலேயே நின்றுகொண்டு எங்களையே கண்கொட்டாமல் பார்த்துக் கொண்டு இருந்தது எனக்குச் சந்தேகத்தைக் கொடுத்தது. கலங்குப் பந்தலில் அவனுக்கு என்ன வேலை இருக்கும்! அங்கும் நின்றுகொண்டு எங்களையே பார்த்துக் கொண்டிருந்தான். நான் அதைப் பற்றி ராஜத்தை மெதுவாகக் கேட்க நினைத்துக் கொண்டிருக்கும்பொழுதே அவள் ஏதோ காரியமாக என்னை விட்டு விட்டுத் தனியாக வெளியில் போனாள். ரகுவும் அவளைப் பின் தொடர்ந்தான். அதிலிருந்துதான் எனக்குச் சந்தேகம் சிறிது வலுத்தது. அவள் திரும்பி வந்ததும் அவளைப் பற்றிக் கேட்டதற்கு, முதலில் ஒன்றும் சொல்லாமல் மழுப்பினாள். பிறகு நான் பலவந்தப்படுத்திக் கேட்டதற்கு, "அவன் பெயர் ரகு; அவன் எங்களுக்குத் தூரத்துச் சொந்தம்; பணக்காரத்துப் பிள்ளை; பி. எஸ்ஸி. வாசிக்கிறான்" என்றாள் முகத்தில் கர்வமும் பூரிப்பும் பொங்க. அவன் அவளைத் தொட்டுத் தாலி கட்டுவதற்குள்ளாகவா அவ்வளவு மமதை வந்துவிட வேண்டும்!

அதற்குப் பிறகு அவள் என்னிடம் அதிக நேரம் இணைந்திருப்பதே இல்லை. ஏதேதோ காரணங்களைச் சொல்லிக்கொண்டு பிரிந்து விடுவாள். அதுவரையிலும் எங்கள் கண்முன் தோன்றின ரகுவும் மறைந்து விடுவான்.

மூன்றாம் நாள் வாசல் பந்தலில் நான் மட்டும் தனியாக நின்று கொண்டிருந்தேன். திடீரென்று என் முன் வந்து அவன் நின்றான். எனக்குத் தூக்கிவாரிப் போட்டது. ஓடிவிடக் காலெடுத்து வைக்கும்பொழுது, "ராஜத்தைப் பார்த்தாயா?" என்று கேட்டான். எனக்குத் தெரியாது என்ற பாவனையில் நான் தலையை அசைத்து விட்டு, நாணம் மேலிட அங்கிருந்து மறைந்து விட்டேன்.

அந்த க்ஷணத்திலிருந்து சுபாவத்தில் தூய்மையாக இருந்த என் உள்ளத்தில் ஒரு கறை படிந்து விட்டது. அதற்கு முன் பிறருடைய பணத்திலும், போக பாக்கியங்களிலும் பொறாமை யடையாத என் மனதில் ஒரு மாச்சரியம் ஏற்பட்டு விட்டது. உயிருக்கு உயிராய் இருந்த சிநேகிதையான ராஜத்தினுடன் பேசவும் கூடாது என்றுகூட வைராக்கியம் கொள்ளும்படி அறிவு பேதலித்து விட்டது.

ராஜம் — ரகு! பேரில்கூட அவர்களுக்கு ஒற்றுமை இருந்தது. பணத்திலும் ஆடம்பரத்திலும் ஒற்றுமை இருந்தது. ஆனால் அழகில், உள்ளப் பண்பில் ராஜம் எங்கே, ரகு எங்கே? ரகுபோல எனக்கும்...... இவ்வாறு எண்ணி மனக் கோட்டை கட்ட வேண்டியதுதான்! எதற்கும் கொடுத்து வைக்க வேண்டாமா? பணமும் ஆள் கட்டும் இல்லாத நான் அதைப்பற்றி நினைப்பது முடவன் கொம்புத் தேனுக்கு ஆசைப் பட்டது போலல்லவா முடியும்!

## 5

நான் இன்னும் குளித்து முடிய வில்லை; வாசலில் காரின் 'ஹாரன்' சத்தம் கேட்டது. ஆம், ராஜத்தினுடைய காரின் 'ஹாரன்' சத்தம் போலவே அது இருந்தது.

ராஜம் எதற்கு வந்திருக்கப் போகிறாள்? ஒருவேளை அவளுக்கும் ரகுவுக்கும் கலியாணம் நிச்சயமாகி விட்டதோ என்னமோ! கை வளையல் கல கலவெனக் குலுங்கும் ஒலியும், புது ஆடைகளின் அசைவிலே தோன்றும் சத்தமும் கூடையில் கேட்கிறது. வேறு யாருடையதோ—ஒரு புதுக் குரல் கேட்கிறதே! ஸ்திரீயினுடைய குரலாக அல்லவா இருக்கிறது! இரு, என்னதான் பேசுகிறார்கள் என்று கேட்போமே!

நான் நினைத்தமாதிரி ராஜத்தின் குரலே முதலில் கேட்கிறது. "மாமி, போனவாரம் கலியாண வீட்டிலேயே இருவரும் ஒருவரை யொருவர் நன்றாகப் பார்த்துக் கொண்டு விட்டார்கள். சுயம்வரம்கூட நடந்திருக்கும்போலத்தான் தோன்றுகிறது! ரகுவிற்கு இனி எந்த ரதியோ ரம்பையோ வந்தாலும் கலியாணம் பண்

னிக் கொள்ள மாட்டானும்; வச்சனைத் தான் அவனுக்குப் பிடித்திருக்கிறதாம்...''

"இதென்னடா, கூத்து! பெரியவாள் சம்மதமே யில்லாமல் நிச்சயமாகி யிருக்கிறதே! நான் எங்கே, அவாள் எங்கே? அவாள்ளாம் பெரிய மனுஷா......''

அதற்குள் புதுக் குரல் கேட்கிறது. "மாமி, இதோ பாருங்கோ, பெண் விஷயமா என் தம்பி சருவின் பேச்சுக்கு எதிர்த்துப் பேச எங்கள் வீட்டில் யாரும் இல்லை. நீங்கள் சம்மதித்தால் அப்பா அம்மாவுக்குத் தந்தி கொடுத்து வரவழைக்க வேண்டும்'' என்று சொன்னது சருவி னுடைய தமக்கைதான்!

இந்தச் சம்பாஷணையைக் கேட்டதும் எனக்கு ஒரு தடவை வியர்த்துக் கொட்டிற்று. என்னை யறியாமல் மயிர்க் கூச்செடுத்தது. அப்படியும் நடக்குமா? சரு எனக்கு மாலையிடுவாளு?

என் அறையை நோக்கி ராஜும் ஓடி வருவது தெரிந்தது. "வச்சன், வச்சன், நீ கொடுத்து வைத்தவனடா!'' என்று சொல்லிக் கொண்டே அவன் என்னைக் கட்டிக் கொண்டான். நான் ஒன்றும் புரியாதவன் போல் அவனை எதிட்டுப் பார்த்தேன்.

"நீ பெரிய திருடியடா! சருவின் உள்ளத்தைத் திருடிக் கொண்டு வந்து விட்டாயே! பி. எஸ்ஸி. பரீட்சை எழுதப்போகும் அந்தப் பிள்ளையாண்டான் என்ன செய்வான் என்று நினைத்துக் கொண்டாய்?'' என்று பரிகாசம் செய்தான்.

"அது யார், சரு......?''

"அதுதான் கலியாண வீட்டில் நீ சொக்குப் பொடி தூவி மயக்கின அதே பேர்வழிதான்!''

"உன்னை வளைய வளைய சுற்றிக் கொண்டு இருந்தாளே......இருந்தாளே!''

"பவித்திரம், எனக்கு மட்டும் அப்பொழுதே நீ இப்படிச் சந்தேகப்படுவா யென்று தெரியும்; என்னைத் தொடர்ந்து வந்ததெல்லாம் உன்னைப்பற்றித் தெரிந்து கொள்ளத்தான்.........!'' என்று சொல்லி விட்டு, அவன் என் கன்னத்தில் ஓர் இடி இடித்து விட்டு ஓடிவிட்டான்.

அன்றுடன் என் தாயார் என்னுடைய அழகில் கொண்டிருந்த அவநம்பிக்கையும் அழிந்தது. அதற்குப் பதிலாக அவள் என் அதிர்ஷ்டத்தை நினைத்து நினைத்து ஆனந்தக் கண்ணீர் வடித்துக் கொண்டிருந்தாள்.




கலியாணத்திற்கு வந்தவர் :—என்ன ஸார், இது! காதல் கல்யாணம் என்கிறீர். தம்பதிகளுக்கு வயது ஐம்பதுக்கு மேல் இருக்கும்போலிருக்கிறதே!

மற்றொருவர் :—அதற்கென்ன ஸார், பண்றது! இப்பொழுதுதான் அந்தக் காதலர்கள் கல்யாணம் செய்து கொள்வதற்கு அவர்களுடைய பெற்றோர் சம்மதித்தார்கள்!

*சுசீலா:
தங்கப்பதுமை அவள்..
என்னே காம்பீரியம்!

## ளே* அவளது எழில்!
## ள் பாண்ட்ஸ்
## உபயோகிக்கிறாள்!

உலகெங்குமே புலவாசிரியர்களும் சிற்பியர்களும் ஒளிந்து கிடக்கும் தங்களுடைய எழிலை பகிரங்கமாகச் சோபிக்கச் செய்ய புதுமுறைகள் கண்டு பிடிக்கின்றனர்.

...சரும சௌந்தரியமே இலக்ஷணம்பொருந்த தேகாங்கங்களின் எழிலை எடுத்துக் காட்டுவது. பாண்ட்ஸ் கோல்ட் க்ரீமிலுள்ள இயற்கைத் தைலங்களின் உதவியால் உங்கள் சருமத்தை மிருதுவாகவும் மழமழப்பாகவும் வைத்துக் கொள்ளுங்கள்.

# பாண்ட்ஸ் க்ரீம்ஸ்

பாண்ட்ஸ் கோல்ட் க்ரீம்: தினம் இரண்டு வேளை விரல் நுனிகளால் கோல்ட் க்ரீம் மெதுவாகத் தடவி, முகத்தை செம்மையாகச் சுத்தம் செய்யுங்கள். பாண்ட்ஸ் துண்டுவால் துடைத்துக் கொள்ளவும்.

POND'S

பாண்ட்ஸ் வானிஷிங் க்ரீம்: பின்பு வானிஷிங் க்ரீம் தடவுங்கள். அது சருமத்தினுள் மறைகிறது—சருமத்திற்கு பாதுகாப்பளிக்கிறது.

POND'S

பாண்ட்ஸ் பௌடர்: பின்னர் வேண்டுமானால் கொஞ்சம் பௌடரும் தடவிக் கொள்ளுங்கள். முகம் பூவிதழ்போன்று மென்மை காந்தியுடன் விளங்கும்.

வியாபார விவரங்களுக்கு:
டி. ஸெய்மூர் & கோ. (இந்தியா) லிட்.
பம்பாய்-கல்கத்தா-கராச்சி-சென்னை.

: Pond's Extract Co

24-8




இந்தியாவில் டிஸ்ட்ரிப்யூட்டர்கள்:

எச். ஜே. பாஸ்டர் & கோ., லிட். பம்பாய், கல்கத்தா, மதராஸ், லாகூர்

குழந்தைகளை பராமரிப்பதைப் பற்றிய சிறிய புத்தகம் 4 அணாவுக்கு ஸ்டாம்புகள் அனுப்பி பெற்றுக் கொள்ளலாம். உங்கள் பெயரையும் விலாசத்தையும் எச். ஜே. பாஸ்டர் & கோ. லிட்., த. பெ. 202, பம்பாய் என்ற விலாசத்திற்கு அனுப்புங்கள்

---

# தசைப் பிடிப்பு, வலி, ஓய்ச்சல்

## முதலியவைகளுக்குத் துரிதமாக

## ஆறுதலளித்து சொஸ்தமளிக்கிறது

ஜாம்பெக்கை ஒரு முறை தடவினாலேயே வலி அநேகமாய் உடனேயே மறைந்து போகும்.

ஜாம்பெக்கிலுள்ள உயர்ந்த மூலிகைத் தைலம் வலியையும் பிடிப்பையும் அகற்றி, தசைக்கு இதமளித்து அதி சீக்கிரமாய் சொஸ்தமளிக்கும்.

விஷப் புண்கள், கட்டப் புண், பூச்சி கடி, சிராய்த்தல், கமச்சல், மூலம், எக்ஸிமா மற்றும் இதர வியாதிகளுக்கு ஜாம்பெக்கின் சுத்தமாக ஆறுதலளித்து சுகப்படுத்தும் குணம் மிக்க இன்றியமையாதது.






# Zam-Buk

உலகப் பிரசித்திப் பெற்ற மூலிகைக் களிம்பு

மிருகக் கொழுப்பின்மைக்கு உத்தரவாதம்

ஏஜண்டுகள்:—மெஸர்ஸ். தாதா & கோ., பி. டி. மதராஸ்

No. 5

# சந்திர ஹாரம்

ஆசிரியர்: பிரேம்சந்த் | மொழிபெயர்ப்பு: ரா.வீழிநாதன்

ரமேஷ் பாபு அப்போது ஆபீஸ் 'பைல்' ...ளப் பார்ப்பதில் மும்முரமாக ஈடுபட் ...ருந்தார். அதனால் ரமாநாத் வந்ததைக் ... அவர் சரியாகக் கவனிக்கவில்லை. ...ந்த வேலைக்காகப் பியூனைக் கூப்பிடும் ...ாருட்டு, அவர் மேஜையின் மீதிருந்த ...ாவின் பெல்லை அடித்தார். அந்தச் ...யம் தமக்கு எதிரே ரமாநாத் நிற்பதைக் ...டதும், "என் அப்பா, இத்தனை ...ழிகை? உன்னைக் கேஷியர் தேடிக் ...ண்டிருந்தாரே! உன்னைப் பியூன் பார்த் ...ளு?" என்று வியப்புடன் கேட்டார்.

...ரமாநாத் மென்று விழுங்கிக் கொண்டு, ...ான் வீட்டில் இல்லை; வக்கீல் வீட்டு ...க்கும் போயிருந்தேன். ஒரு பெரிய ...டத்தில் மாட்டிக் கொண்டு விட் ...டன்!" என்று சொன்னான்.

"என்ன கஷ்டம்? வீட்டில் எல்லாரும் ...ளக்கியம்தானே?" என்று விசாரித் ...ர் ரமேஷ்பாபு.

"வீட்டில் எல்லாரும் சௌக்கியம் ...ன். நேற்று சாயந்திரம் இங்கே கொஞ் ... வேலை அதிகமாயிருந்தது. நேரம் ...வதே தெரியாமல் போய்விட்டது. ...லையை முடித்துக் கொண்டு எழுந்து ...ந்தேன். கேஷியர் புறப்பட்டுப் போய் ...டார். நேற்றைய வரும்படி என்னுடை ...ாய் என் கையில் இருந்தது. என் ...றையிலோ பெட்டி கிடையாது. எங்கே ...ப்பது என்று புரியவில்லை. ஆகையால் ...யோடு எடுத்துக் கொண்டு போனேன். ...று ரூபாய் சில்லறையாகவும் மூன் ...று ரூபாய் நோட்டாகவும் இருந்தது. ...ட்டைக் கோட்டுப் பையில் வைத்துக் கொண்டேன். சில்லறைகள் என் கையிலிருந்த பையில் இருந்தன. 'சௌக்'கில் இரண்டொரு சாமான் வாங்க வேண்டியிருந்தது. இறங்கிச் சாமானை வாங்கிக் கொண்டு வீட்டுக்குப் போய்ப் பையைப் பார்த்தால் நோட்டைக் காணோம்!" என்று ஒரு போடு போட்டான் ரமாநாத்.

ரமேஷ்பாபு அவனை விழுங்கி விடுபவர் போலப் பார்த்து, "என்ன? மூந்நூறு ரூபாய் நோட்டைக் காணோமா?" என்று கேட்டார்.

"ஆமாம்; கோட்டுப் பையில் வைத்திருந்தேன். யாரோ உருவிக் கொண்டு போய்விட்டார்கள்!"

"உன்னையும் அடித்துப் பையையும் பிடுங்கிக் கொண்டு போய்விடாமல் இந்த மட்டுமாவது விட்டார்களே!"

"என்னத்தைச் சொல்லுவது, போங்கள்! அது கெட்டுப் போனது முதல் என் மனம் படாத பாடு படுகிறது. பணத்துக்காக நான் அலையாத இடம் கிடையாது. இன்னும் கிடைத்தபாடில்லை."

"உன் அப்பாவிடம் சொன்னாயோ?"

"அவரிடம் சொல்லி என்ன பிரயோஜனம்? அவர் சுபாவம்தான் உங்களுக்குத் தெரியுமே! அவரிடம் சொல்லி 'வீணாகத் திட்டுக் கேட்பானேன்' என்று எண்ணிப் பேசாமல் இருந்துவிட்டேன்!"

ரமேஷ்பாபு மிகவும் கடுமையான குரலில், "நீ இவ்வளவு அலட்சியமாக எப்படியிருந்தாய் என்றுதான் எனக்குப் புரியவில்லை. இன்றுவரை என் பையிலிருந்து ஒரு காலணாக் கீழே விழுந்ததில்லை. கண்களை இறுக மூடிக் கொண்டா கடைத் தெருவில் சுற்றினாய்? உன் வார்த்தையில்

எனக்கு நம்பிக்கையே யில்லை. உண்மையைச் சொல்லு. ஏதாவது அடாபிடிச் செலவு செய்து விட்டாயா, என்ன? ஆமாம், அன்றைக்கு எதற்காக என்னிடம் ரூபாய் கேட்டனுப்பினாய்?" என்று கேட்டார்.

ரமாநாத்தின் முகம் வெளுத்து விட்டது. 'தன் ரகசியம் அம்பலத்துக்கு வந்து விடாமல் இருக்க வேண்டுமே!' என்ற பயத்துடன், "சர்க்கார் காசை எடுத்துச் செலவழித்து விடுவேனா! அவ்வளவு மூளை கூடவா எனக்கு இல்லை? அன்று அப்பாவுக்கு ஏதோ பண முடையாக இருந்தது. வீட்டில் பணம் இல்லாமற் போகவே, உங்களுக்கு எழுதிக் கேட்கச் சொன்னார். உங்கள் பதிலை அவருக்குக் காட்டினேன். படித்து விட்டுச் சிரித்தார். பிறகு வேறிடத்தில் எங்கேயோ ஏற்பாடு செய்து கொண்டு விட்டார். இந்தப் பணம் கெட்டுப் போனது எனக்கே ஆச்சரியமாயிருக்கிறது!" என்று அவன் ஏதோ சப்பைக் கட்டுக் கட்டிப் பதில் அளித்தான்.

"உனக்கு உன் அப்பாவிடம் கேட்கச் சங்கோசமாயிருந்தால், நானே வேண்டுமானாலும் கடிதம் எழுதுகிறேன்!" என்றார் ரமேஷ்பாபு.

ரமாநாத் தன் காதுகளைக் கைகளால் பொத்திக் கொண்டு, "அது மட்டும் வேண்டாம், ஸார்! என்னைச் சிறைக்கு வேண்டுமானாலும் அனுப்பி விடுங்கள், அப்பாவிடம் மட்டும் தயவு செய்து எனக்காகக் கேட்காதீர்கள்!" என்றான்.

ரமேஷ்பாபு சற்று நேரம் யோசித்து விட்டு, "சாயந்திரத்துக்குள் உனக்குப் பணம் கிடைத்து விடுமா?" என்று கேட்டார்.

"கிடைத்து விடலாம் என்றுதான் நம்புகிறேன்!" என்றான் ரமாநாத்.

"சரி, அப்படியானால் பையிலிருக்கும் பணத்தைக் கஜானாவில் கட்டிவிடு. ஆனால் இப்பொழுதே ஒன்று சொல்லி வைக்கிறேன். நாளைக் காலை பத்து மணிக்குள் நீ பணத்தைக் கொண்டு வந்து கட்டாவிட்டால், என்னைக் குற்றம் கூறுவதில் பிரயோஜனமில்லை. நியாயப்படி இப்பொழுதே நான் உன்னைப் போலீஸில் ஒப்படைத்திருக்கவேண்டும். நீ இன்னும் சிறு பிள்ளையாக இருப்பதால், 'போனால் போகிறது' என்று உன்னை மன்னிக்கிறேன். ஆபீஸ் விஷயத்தில் நான் யாரிடமும் தயவு தாட்சண்யம் வைத்துக் கொள்ளுவதில்லை என்பதும்தான் உனக்குத் தெரியுமே! உன்னிடமுள்ள அன்பு காரணமாகத்தான் நான் உனக்கு இந்தச் சலுகை காட்டினேனே தவிர, உன்னுடைய ஸ்தானத்தில் என்னுடைய தம்பியோ, பிள்ளையோ வேலை பார்த்துக் கொண்டிருந்தால் கொஞ்சம் கூட நான் மீனமேஷம் பார்த்திருக்க மாட்டேன்; இன்னும் கடுமையாகத்தான் நடந்து கொண்டிருப்பேன். என்னிடம் பணம் இருந்தால் உனக்காகக் கொடுத்திருப்பேன். ஆனால் என் விஷயம் தான் உனக்குத் தெரியுமே! நான் யாரிடமும் கடன் வாங்குவதும் இல்லை; கொடுப்பதும் இல்லை. நாளைக்குள் பணம்



வரவில்லை யென்றால், அப்புறம் நான் ஒன்றும் செய்வதற்கில்லை. நீ எனக்கு ரொம்ப வேண்டியவன் என்பதற்காகத் தான் நான் உனக்கு ஒரு நாள் அவகாசம் கொடுத்திருக்கிறேன். இல்லாவிட்டால், உன் கைகளில் இவ்வளவு நேரம் விலங்கு மாட்டப்பட் டிருக்கும்!" என்றார் ரமேஷ்பாபு.

'கைகளில் விலங்கு!' என்ற சொல், ரமாகாந்தின் உள்ளத்தில் அம்பு போல் ஊடுருவிப் பாய்ந்தது. அந்தச் சொல் செவியில் விழுந்ததும், அவனுக்குத் தலையிலிருந்து கால் வரை தூக்கிவாரிப் போட்டது. வரப்போகும் ஆபத்தை நினைத்து அவன் கண்களில் நீர் கசிந்தன. அவன் தலையைத் தொங்கவிட்டுக்கொண்டு, தண்டனை அடைந்த கைதியைப் போல் மெதுவாக நடந்து சென்று தன்னுடைய நாற்காலியில் உட்கார்ந்தான். ஆனால் அந்தப் பயங்கரச் சொல், அவனுடைய உள்ளத்தில் இடையிடையே திரும்பத் திரும்ப ஒலித்துக் கொண்டிருந்தது.



ஆகாயத்தில் கரிய மேகங்கள் சூழ்ந்திருந்தன. சூரியன் இருக்கும் இடமே தெரியவில்லை. அந்தச் சூரியனும் மேகச் சிறைக்குள் அடைபட்டு விட்டானோ? அவனுடைய கைகளிலும் கைவிலங்குகள் ஏறியிருக்குமோ!

## இருபதாம் அத்தியாயம்
## என்ன செய்வான்!

ரமாகாந்த் ஆபீஸிலிருந்து வீட்டுக்குப் புறப்பட்டுக் கொண்டிருந்தான். அந்தச் சமயம் ரமேஷ் பாபு அவனிடம் ஓடோடியும் வந்து, 'நாளைக்குக் கட்டாயம் பணம் கொண்டு வந்துவிட வேண்டும். சால் சாப்புச் சொல்லக் கூடாது' என்று ஞாபகப் படுத்திவிட்டுப் போனார். 'இந்த மனுஷ்யன்தான் பெரிய நாணயஸ்தன் போலப் பேசுகிறாரே! இதெல்லாம் வெளி வேஷம்! இவருக்கு வந்தால் தெரியும்! 'செத்தால் தெரியும், செட்டியார் வாழ்வு!' என்று தெரியாமலா பெரியவர்கள் சொல்லிப் போனார்கள்! இவருக்குப் பணமுடை வந்து விட்டால், காலில் விழாத தோஷமாக வந்து கெஞ்சுவார்; பல்லைக் காட்டுவார்; எல்லாம் செய்வார். இன்றைக்கு இல்லாவிட்டால் என்றைக்காவது ஒரு நாள் இவரும் நம்மிடம் வந்துதான் ஆக வேண்டும்! அப்பொழுது பேசிக் கொள்கிறேன்!" என்று ரமாகாந்த் மனத்துள் எண்ணமிட்டுக் கொண்டான்.

கொஞ்ச தூரம் சென்றதும் அவனுக்கு ஒரு யோசனை தோன்றியது. 'நமக்குப் பணம் கொடுத்து உதவக் கூடியவர்கள் தான் வேறு யாரும் இல்லையே! இந்த ரத்னனையேதான் இன்னுமொரு தடவை பார்த்தால் என்ன?" என்று எண்ணி அவன் அவன் வீட்டுப் பக்கமாக சைக்கிளை விட்டான். அவன் அவனுடைய வீட்டை அடைந்தபொழுது, ரத்னன் ஹாலில் உட்கார்ந்திருந்தான். பக்கத்தில் ஒரு குஜராத்தி வியாபாரி உட்கார்ந்துகொண்டு, அழகழகான நகைகளை எடுத்துக் காண்பித்துக் கொண்டிருந்தான். ரமாகாந்தைப் பார்த்ததும் ரத்னன் மிகவும் மகிழ்ச்சியுடன், "வாருங்கள், வாருங்கள்!" என்று வரவேற்றான். பிறகு "பார்த்தீர்களா, இந்த ஹாரத்தை! ஆயிரத்து இருநூறு ரூபாய் சொல்லுகிறார்! நல்ல நல்ல நகைகள் எல்லாம் கொண்டு வந்திருக்கிறார்!" என்று

சொல்லி ஒரு ஹாரத்தை எடுத்துக் காட்டினான்.

ரமாகாந் ஹாரத்தைக் கையில் வாங்கிப் பார்த்து, "நல்லதாகத்தான் இருக்கும் போலிருக்கிறது!" என்றான்.

"விலைதான் அதிகமாகச் சொல்லுகிறீர்!" என்றாள் ரத்தன்.

"அப்படிச் சொல்லி விடாதீர்கள், அம்மா! இந்தமாதிரி ஹாரம் உங்களுக்கு இரண்டாயிரம் கொடுத்தாலும் கிடைக்காது. நீங்கள் நம்பினால் நம்புங்கள்; நம்பாவிட்டால் போங்கள்! எனக்கு இதன் அடக்கமே ஆயிரத்து இருநூறு ரூபாய் ஆகிவிட்டதாக்கும்!" என்றான் வியாபாரி.

"சேட்ஜி, எங்களை ஒன்றும் தெரியாதவர்கள் என்று எண்ணிக் கொள்ளையடிக்கப் பார்க்கிறீர்களே! எங்களுக்கும் நகையைப் பற்றிக் கொஞ்சம் தெரியும். வீணாக வார்த்தைகளைக் கொட்டி விட்டு மாட்டிக் கொண்டு விழிக்காதீர்கள்!" என்றான் ரமாகாந்.

"எசமான்! உங்களுக்கு நான் சொல்ல வேண்டு மென்பதில்லை. இதைவிடப் 'பள பள'வென்று கண்களைப் பறிக்கக்கூடிய ஹாரங்கள் எத்தனையோ நூறு ரூபாய்க்குக் கூடக் கிடைத்து விடும். ஆனால் சாமானுடைய தராதரத்தைப் பார்க்க வேண்டாமா? நீங்கள் ஒன்றும் தெரியாதவர்களா, கூட்டிக் குறைத்து நான் பேரம் பேசுவதற்கு? ஒன்றும் தெரியாதவர்களிடம் அல்லவா நான் அப்படி யெல்லாம் பேரம் பேச வேண்டும்!" என்றான் வியாபாரி.

ரத்தன் ஆவல் ததும்பும் பார்வையுடன் அந்த ஹாரத்தைப் பார்த்தவாறு, "கொஞ்சம் குறைத்துக் கொள்ளுங்கள்!" என்றாள்.

"அந்தப் பேச்சுத்தான் வேண்டாம் என்கிறேன். ஒரு தம்பிடிகூடக் குறைக்க முடியாது. இந்த ஊரிலேயே உங்கள் கண்ணுக் கெதிரே இதை ஆயிரத்து ஐந்நூறு ரூபாய்க்கு விற்றுக் காட்டுகிறேன், பார்க்கிறீர்களா?" என்று சொல்லிவிட்டு, ஹாரத்தை எடுத்து வைப்பதற்காக வியாபாரி பெட்டியைத் திறந்தான்.

ரத்தன் குழந்தைகளைப்போல் பொறுமை யிழந்து, "ஹாரத்துக்குத் திருஷ்டி பட்டு விடும் என்று மூடி மூடி வைக்கிறீர்களா, என்ன!" என்று கேட்டாள்.

"என்ன செய்வது அம்மா, எல்லாம் தெரிந்த நீங்கள்கூட ஹாரத்தின் தராதரத்தைப் பார்க்காமல், வாங்கத் தயங்கு வதைக் காண என் மனதுக்கு மிகவும் வருத்தமா யிருக்கிறது!" என்றான் வியாபாரி.

ரத்தன் தன் அறைக்குள் போய் ரமாகாந்தை உள்ளே வரும்படி சமிக்ஞை செய்தாள். ரமாகாந் உள்ளே சென்றதும் "இவன் விலையைக் குறைப்பான் என்று உங்களுக்குத் தோன்றுகிறதோ?" என்று கேட்டாள்.

"என்னைக் கேட்டால், இதற்கு ஆயிரத் துக்கு மேல் கொடுக்கக் கூடாது என்று தான் சொல்லுவேன்" என்றான் ரமாகாந்.

"நானும் அப்படித்தான் நினைத்தேன். ஆமாம், உங்களிடம் நானூறு ரூபாய் இருக்குமோ? என்னிடம் அறுநூறு ரூபாய்தான் இருக்கிறது. அவன் இன்று வண்டியிலேயே காசிக்குப் போகப் போகிறானாம். அதனால் கடனாகக் கொடுக்கமாட்டானோ என்று தோன்றுகிறது. வக்கீல் எங்கேயோ 'மீட்டிங்'குக்குப் போயிருக்கிறார். அவர் வ வதற்கு ஒன்பது மணி யாகும். நீங்கள் எங்கேயாவது நானூறு ரூபாய்க்கு ஏற்பா செய்து கொடுத்தால், அவர் வந்தது வாங்கித் தந்து விடுகிறேன்" என்றா ரத்தன்.

ரமாகாந் மிகவும் சங்கோசத்துடன் "என் கையில் தம்பிடிகூடக் கிடையாது. நான் இப்பொழுது இங்கே வந்ததே உங் ளிடம் ஏதாவது பணம் வாங்கிப் போகலா என்பதற்காகத்தான். எனக்கு ரொம்ப முடையாக இருக்கிறது. நீங்கள் அந் பணத்தை இப்பொழுது எனக்கு கொடுத்து உதவுங்கள். இன்னும் இர டொரு நாட்களில் உங்களுக்கு இதைவி நல்ல ஹாரமாக நான் இங்கேயே எழுநூறுக்குள் வாங்கித் தருகிறேன் என்றான்.

"போதும், போங்கள்! உங்கள் பேச் நான் தண்ணீரில்தான் எழுதி வை வேண்டும். உங்களிடம் ஒரு கங்கணம் வா கித் தரச் சொல்லி ஆறு மாதத்துக்கு மே ஆகிவிட்டது. இன்னும்தான் வாங்கித் த கிறீர்கள். நீங்களாவது, ஹாரம் வாங்கித் வாவது? நான் எத்தனையோ கடைகளை சல்லடை போட்டுச் சலித்துப்பார்த்து வி டேன். இந்தமாதிரி ஹாரம் எந்தக் கடை யிலுமே கிடைக்கவில்லை. அப்படிக் கிடை தாலும் யானை விலை, குதிரை விலையா சொல்லுகிறார்கள்!" என்றாள் ரத்தன்.

"அப்படியானால் இவனை நாளைக்கே
ச் சொல்லுவதுதானே? தனக்கு வியா
ரம் ஆகவேண்டும் என்றால் தானே
ளைக்குத் தங்குகிறான்!"

"சரி, அப்படியானால் நீங்களே சொல்
ங்கள். என்ன சொல்லுகிறான், பார்ப்
பாம்" என்றான் ரத்தன்.

பிறகு இருவரும் அறைக்கு வெளியே
தார்கள். சமாகாத் வியாபாரியைப்
ர்த்து, "நாளைக் காலையில் எட்டு
ணிக்கு வா, அப்பா!" என்றான்.

"இல்லை, எசமான்! நாளைக்குக் காசி
லே இரண்டு மூன்று பேர்வழிகளைப்
ர்க்க வருவதாகச் சொல்லியிருக்
றேன். கட்டாயம் போய் ஆகவேண்டும்.
ன்றைக்கு நான் புறப்படவில்லை
யன்றால் எனக்கு ரொம்ப கஷ்டம் ஏற்
ட்டு விடும்" என்றான் வியாபாரி.

"என்னிடம் இப்பொழுது கையில்
றுாறு ரூபாய்தான் இருக்கிறது. அதை
ங்கிக் கொண்டு ஹாரத்தைக் கொடுத்து
ட்டுப் போங்கள். பாக்கியைக் காசியி
ருந்து திரும்பி வரும்பொழுது வாங்கிக்
காண்டு போங்கள்!" என்றான் ரத்தன்.

"பணத்துக்கென்ன! இன்னும் இரண்டு
ன்று மாதம் பொறுத்து வேண்டுமானாலும்
ங்கிக் கொள்ளுவேன். ஆனால் நானோ
யலூர்க்காரன். இப்பொழுது போனால்,
ப்புறம் எப்பொழுது திரும்பி வருவேனோ,
ச்சயமாகச் சொல்லுவதற்கில்லை. ஆகை
ல் இப்பொழுது நீங்கள் ஆயிரம் ரூபா
யக் கொடுத்து விட்டால், பாக்கி இரு
றை அப்புறம் சாவகாசமாக வாங்கிக்
காள்ளுகிறேன்" என்றான் வியாபாரி.

"அப்படியானால் இப்பொழுது வாங்கு
தற்குச் சௌகரியமில்லை" என்றான்
மாகாத்.

"அதற்குமேல் உங்கள் இஷ்டம். ஆனால்
த்தமாதிரி ஹாரம் மட்டும் கிடைக்காது
ன்பதைச் சொல்லி வைக்கிறேன்"
ன்றான் வியாபாரி.

"பணம் இருந்தால் எதுதான் கிடைக்
து? எல்லாம் கிடைக்கும்" என்றான்
மாகாத்.

"பணம் இருந்தாலும் சில சமயங்
ளில் நல்ல சாமான் கிடைப்பதில்லை,
சமான்!" என்று சொல்லிவிட்டு, வியா
ரி ஹாரத்தை எடுத்துப் பெட்டிக்குள்
வைத்துக் கொண்டான்.

தனது விதி நிர்ணயிக்கப் படுவதைக்
கட்கத் துடியாய்த் துடிக்கும் கைதியின்
ள்ளத்தைப்போல ரத்தனின் உள்ளம்

## பெயர் என்ன?

ஸ்டாலின் முன்பு யுத்த தளவாட மந்திரியாக இருந்தபோது, ருஷ்யாவிலே ஒரு பகுதியில் பெரும் பஞ்சம் உண்டாயிற்று. ஒரு நாள் அவர் சில நண்பர்களுடன் பேசிக் கொண்டிருந்த போது, அந்த நண்பர்களில் ஒருவர், இந்தப் பஞ்சத்தின் கொடுமையைப் பற்றிக் குறிப்பிட்டார். ஒவ்வொரு நகரத்திலும் கிராமத்திலும் எத்தனை பேர் செத்துப் போனார்கள் என்பதையும் அவர் சொல்லிக் கொண்டு வந்தார். அப்போது ஸ்டாலின் இடையில் புகுந்து, "நிறுத்தும்! சாப்பாட்டுக்கு இல்லாமல் ஒரு மனிதன் செத்துப்போனால்தான் அது கோரம்; ஆயிரக் கணக்கானவர்கள் செத்துப்போனால் அது கோரம் அல்ல, பஞ்சமும் அல்ல; அது வெறும் புள்ளி விவரம்!" என்றார்.

துடித்தது. அந்த உள்ளத்தின் ஆழத்திலிருந்து எழும் ஆசை; அந்த ஆசையிலிருந்து கசிந்து உருகும் ஆதுரம்; அந்த ஆதுரத்தினால் ஏற்படும் பொறுமையின்மை, ஆத்திரம், ஆவல், ஈடுபாடு இவைகளின் காரணமாக, ரத்தன் ஹாரம் வைத்திருந்த பெட்டியை வைத்த கண் வாங்காமல் பார்க்கலானான். வியாபாரி பெட்டியை மூடுவதைக் கண்டதும், அவனுடைய உள்ளம் நீரிலிருந்து எடுத்துக் கரையில் போடப்பட்ட மீனைப்போலத் துடியாய்த் துடித்தது. அதன் காரணமாக இங்கும் அங்கும் ஓடிப் பெட்டியைத் திறப்பான், மேஜை டிராயரைத் திறப்பான், அலமாரியைத் திறப்பான்! ஆனால் எதிலிருந்தும் பணம்தான் கிடைக்கவில்லை!

இதே சமயம் மோட்டாரின் சத்தம் கேட்கவே அவன் வாசலைப் பார்த்தான். கார் வெகு வேகமாக வராந்தாவுக்கு எதிரில் வந்து நின்றது. அதிலிருந்து வக்கீல் இறங்கி நேரே ஹாலுக்குள் நுழைந்தார். ரத்தன் அவரை எதிர்கொண்டழைத்து, "ஒன்பது மணிக்குத்தான் வருவேன் என்று சொல்லி விட்டுப் போனீர்களே!" என்று கேட்டான்.

"மீட்டிங்குக்கு யாருமே வரவில்லை. நான் மட்டும் அங்கே உட்கார்ந்திருந்து என்ன செய்ய முடியும்? எல்லாரும் தீவட்டித் தடியன் மாதிரி உட்கார்ந்திருக்கிறார்களே தவிர, நன்றாக வேலை செய்ய வேண்டும் என்று எண்ணுவதேயில்லை. எல்லாருக்கும் பெயருக்கு மட்டும் ஆசையாக இருக்கிறது! ஆமாம், யாரோ நகை வியாபாரி வந்திருக்கிறாப் போலிருக்கிறதே!"

ஏதாவது நகை வாங்கப் போகிறாயா, என்ன?" என்று கேட்டார் வக்கீல்.

நகை வியாபாரி அவரைப் பார்த்ததும் கையைக் கூப்பிக் கும்பிட்டான். வக்கீல் ரத்னனைப் பார்த்து, "உனக்கு ஏதாவது பிடித்திருக்கிறதா?" என்று கேட்டார்.

"ஒரு ஹாரம் பொறுக்கி எடுத்து வைத்திருக்கிறேன். ஆயிரத்து இருநூறு ரூபாய் என்று சொல்லுகிறார்!" என்றான் ரத்னன்.

"இன்னும் ஏதாவது பிடித்திருந்தால் எடுத்துக் கொள்ளேன்!"

"இது போதும்; வேறொன்றும் வேண்டாம்."

"நிலைக்கு வைத்துக் கொள்ளக்கூடிய நகை ஒன்றுமே உன்னிடம் இல்லையே! ஏதாவது ஒன்று வாங்கிக் கொள்ளுவது தானே?"

"இந்தக் காலத்தில் நிலைக்கெல்லாம் யார் நகை வைத்துக் கொள்ளுகிறார்கள்! இது ஒன்றே போதும்; வேறொன்றுமே வேண்டாம்!" என்றான் ரத்னன்.

"எதற்கும் ஒன்று வாங்கி வைத்துக் கொள்ளேன். எப்பொழுதாவது போட்டுக் கொள்ளலாம், பார்!" என்றார் வக்கீல்.

வக்கீலுக்கு ரத்னன் மீதுள்ள அன்பு கணவனின் நேசத்தைப் போன்றதல்ல; தந்தையின் பாசத்தைப் போன்றது. பரிவுள்ள தந்தை, தேர் திருவிழாக்களில் வேண்டியதைக் கேட்டுக் கேட்டுக் குழந்தைகளுக்கு வாங்கிக் கொடுக்கிறார் அல்லவா? அதே போல வக்கீல் ரத்னனுக்கு வேண்டியதைக் கேட்டுக் கேட்டு வாங்கிக் கொடுத்து வந்தார். அவன் ஏதாவது வேண்டுமென்று சொல்ல வேண்டியதுதான் தாமதம்; உடனே வாங்கிக் கொடுத்து விடுவார். ரத்னனை முகம் கோணாமல் திருப்தியுடன் வைத்துக் கொள்ளுவதற்கு அவரிடம் பணத்தைத் தவிர வேறென்ன இருந்தது? அவருக்கு அந்தத் தள்ளாத வயதில் வாழ்க்கைப் போரைச் சமாளிப்பதற்காக வேண்டி, ஊன்றுகோலைப் போல உதவக்கூடிய ஏதாவது ஒன்று வேண்டியிருந்தது. உபாஸகர் வழிபடுவதற்கு விக்ரஹம் தேவையாயிருக்கிறதல்லவா? விக்ரஹம் இல்லாவிட்டால், அவன் எதற்கு அபிஷேகம் செய்வான்? அர்ச்சனை செய்வான்? அலங்காரம் செய்வான்? தின்பண்டங்களை நிவேதனம் செய்வான்? அதே போலத்தான் வக்கீலுக்கு ஒரு மனைவி வேண்டியிருந்தது. ரத்னன் அவருக்குத்தான் எண்ணிய கற்பனை உருவமாகக் காட்சி யளித்தான். அதைக் கொண்டு அவர் தன் ஆத்ம தாகத்தைத் தணித்துக் கொண்டார். கண்கள் இ
விட்டால் முகம் சோபையிழந்து வி
போல, ரத்னன் இல்லாவிட்டால்
ருடைய வாழ்க்கையே வெறிச்செ
போயிருக்கும்!

ரத்னன் பெட்டியிலிருந்த ஹார
எடுத்து வக்கீலுக்குக் காட்டி, "இத
தான் ஆயிரத்து இருநூறு ரூபாய
என்றான்.

'பணத்தினிடம்தான் மனிதனு
ஆனந்தத்தைக் கொடுக்கும் சக்தி
கிறது' என்ற கட்சியைச் சேர்ந்தவர் வ
இந்துபூஷண். ரத்னனுக்கு அந்த ஹ
பிடித்திருந்தால் போதும்; அவருக்கு
யைப் பற்றி அக்கறையில்லை. வாங்கி
தயாராயிருந்தார். அவர் 'செக்'
கத்தை எடுத்து வைத்துக் கொண்ட
வியாபாரியைப் பார்த்து, "உண்மை
சொல்; எத்தனை ரூபாய்க்குச் 'செ
எழுதித் தர வேண்டும்? ஏதாவது
சொன்னால் அப்புறம் உன்னை லேசில்
மாட்டேன்!" என்று கேட்டார்.

வியாபாரி மறுபடியும் ஒரு முறை ஹா
தைப் புரட்டிக் கிரட்டிப் பார்த்து வி
தயங்கித் தயங்கி, "ஐம்பது ரூபாய் வே
மானால் குறைத்துக் கொள்ளுங்க
என்றான்.

வக்கீல் 'செக்' எழுதிக் கொடுத்த
வியாபாரி வந்தனம் தெரிவித்து
அங்கேயிருந்து புறப்பட்டுச் சென்றா

ரத்னனின் முகம் மலர்ந்த கா
இயற்கையின் சோபையைப்
மலர்ந்து காட்சியளித்தது. இன்று
அவனுடைய முகத்தில் இந்த மா
கர்வமும், உல்லாஸமும் தாண்டவ
யதே யில்லை.

அவன் ஹாரத்தைக் கழுத்தில்
டுக் கொண்டு வெகு ஒய்யாரமாகச் ச
லறைப் பக்கம் போய் விட்டான்.
வரை சமையலறைப் பக்கம்
அறியாத அவன், வக்கீலுக்கு
விருந்து செய்து வைக்க எண்ணித் தா
சமையல் வேலையைக் கவனிக்கச்
றான். வக்கீலுக்குத் தன்னுடைய நன்றி
ஏதாவது ஒரு வழியில் தெரிவித்
வேண்டுமே, இல்லையோ!

ரமாகாந்த் சிறிது நேரம் வக்கீலு
உட்கார்ந்து, அவர் அளந்த ஜோச
யாத்திரைக் கதையைக் கேட்டுக்கொ
டிருந்தான். கடைசியில் நம்பிக்
யிழந்து வாடிய முகத்துடன் வீட்டு
புறப்பட்டான். (தொட

# அப்பா எங்கே?


1


2


பழமாதிருடறே?
உங்கப்பாகிட்டே
சொல்லி என்ன
பண்றேன், பார்!
உங்கப்பா எங்கேடா?
3


அதோ மரத்-
துமேலேதான்
அவரும்
இருக்கார்!
4

# சுதந்திரம் கிடைத்தது!

எஸ். வி. எஸ்.

நரசிம்மனுக்கு வரவர சுதந்திர உணர்ச்சி அதிகமாகி வந்தது.

எத்தனை நாள் இந்த ராஜத்தின் கொடுமைக்கு ஆளாகி வருவது? இப்படிப் பொறுத்துப் பொறுத்துப் பார்த்தால் முடியாது; அவளுடைய ஆட்சிதான் பலப்பட்டு விடும். ஏதாகிலும் வழி தேடியே ஆகவேண்டும், ராஜத்தின் அதிகாரத்திலிருந்து விடுபட்டே யாகவேண்டும் என்று அவன் தீர்மானித்தான்.

என்ன இது! "ராஜம், இன்னிக்கு நல்ல வெங்காய சாம்பாராக வை! சாப்பிட்டு ரொம்ப நாளாச்சு!" என்றால், அவள் பண்ண வேண்டியதுதானே! ஒரு பெண்டாட்டிக்குத் தன் கணவனுடைய வார்த்தையைவிட மேலானது ஒன்று இருக்க முடியுமா?

ஆனால் ராஜம், "என்ன, இன்னிக்குக் கிருத்திகை. சுப்பிரமண்ய ஸ்வாமி கோவிலுக்குப் போகலாம்னு இருக்கேன்! எனக்குக்கூட உபவாசம். அதனாலே, இன்னிக்கு வெங்காய சாம்பார் வேண்டாம்! நாளைக்கு வெங்காய சாம்பார், உருளைக் கிழங்கு பொடிமாஸ், பொரிச்ச அப்பளம்—எல்லாமாகப் பண்ணிப் போடறேன்! இன்னிக்கு மிளகு ரஸமா......என்ன சொல்றேன்!" என்று குழைந்து பேசுவாள்! அப்போது 'சரி, உன் இஷ்டம்போல் செய்!' என்று தானே சொல்ல வேண்டி யிருக்கிறது?

சென்ற வாரம் சனிக்கிழமை காலை, ஆபீசுக்கு அவசரமாகப் போக வேண்டும் என்று நரசிம்மன் குளிப்பதற்காகக் கிணற்றடிக்குப் போனான். சாதாரணமாகப் பச்சை ஜலத்தில்தான் அவன் குளிப்பது வழக்கம். ஆனால் அன்று ராஜம் அவன் கிணற்றடிக்குப் போவதைப் பார்த்து, 'எங்கே போறேள்? எண்ணெய் காய்ச்சி, வெந்நீரும் அண்டா நிறையப் போட்டு வச்சிருக்கேன். எண்ணெய்த் தேய்த்து ஸ்நானம் பண்ணிவிட்டுப் போங்கள்!" என்று ஒரு கட்டளை பிறப்பித்தாள். அவனுக்குக் கோபம் கோபமாக வந்தது. 'கண்ணு மின்னு' என்று திட்டலாமா என்று நினைத்தான். ஆனால், அதன் மூலம் ஏதாவது விபரீத விளைவுகள்தான் ஏற்படும் என்று கருதி, அவள் ஆக்ஞைக்குக் கட்டுப்பட்டே போக வேண்டி யிருந்தது.

இம் மாதிரி எத்தனை நாள் நடக்கிறது! எத்தனை நாள் அவளுக்கு அவன் அடங்கிக் கிடப்பது!

இது மட்டுமா? ஒரு புருஷன் என்றிருந்தால், தன் பெண்சாதியுடன் பீச்சுக்கு, சினிமாவுக்குப் போக வேண்டும் என்று ஒரு நாள் இல்லா விட்டாலும் இன்னொரு நாள் ஆசை ஏற்படாதா? அந்த ஆசை மட்டும் இந்த ராஜத்திடம் நிறைவேறுது. அன்றைக்கு, "சினிமாவுக்குப் போகலாம், வருகிறாயா?" என்று அவளைக் கூப்பிட்டான் நரசிம்மன்.

"இன்றைக்குத் திருவல்லிக்கேணி பார்த்தசாரதி கோவில்லே மோகினி அவதாரமாம்! அடுத்தாத்து அம்மாமி, 'பார்க்கிறதுக்கு ஆயிரம் கண் வேணும். அவ்வளவு அழகா யிருக்கும்' என்கிறாள். சினிமாவுக்குப் போறதுக்குப் பதிலாக, நாம் இரண்டு பேருமாகப் போய் ஸ்வாமி தரிசனம் பண்ணி விட்டு வருவோம், வாருங்களேன்!" என்றாள்.

அவனுக்கு அலுப்புத் தட்டிவிட்டது. "கோவிலாவது, குளமாவது! ஒரு இடத்துக்குக் கூப்பிட்டால் இன்னொரு இடத்துக்கு வரேன் என்கிறது!" என்று எரிச்சலுடன் கூறினான்.

ராஜத்தின் முகம் சுருங்கிவிட்டது. "சினிமாதான் வாரம் தவறாது, நாள் தவறாது நடக்கிறதே! மோகினி அவதாரம் வருஷத்துக்கு ஒரு நாள் நடக்கிறது. அதற்குப் போவோம் என்றால்..." என்று முகத்தைத் தூக்கி வைத்துக் கொண்டாள். ஆகவே, அன்றும் அவன் தன்னுடைய இட்டத்தைக் கைவிட்டு, அவள் இட்டத்துக்குப் பணிந்து போக வேண்டியதாகவே ஆகிவிட்டது.

"இனிமேல் இவ்விதம் நடக்க விடக் கூடாது; இனி ராஜத்துக்குப் பணிவு இல்லை. இன்றிலிருந்து அவள் கொடுங் கோலிலிருந்து விடுதலை பெற்றே யாக வேண்டும். இன்றே ஏதாகிலும் அதற்கு வழி பண்ணி யாகவேண்டும்!" என்று நரசிம்மன் முடிவு செய்தான்.

அவன் முடிவு செய்யவும் ஆபீஸ் கடிகாரத்தின் மணி டாண், டாண் என்று ஐந்தடிக்கவும் சரியாக இருந்தது. நாற்காலி மேல் போட்டிருந்த கோட்டைத் தூக்கி மாட்டிக் கொண்டு வீட்டுக்குப் புறப்பட்டான்.

• • •

"அப்பாவிடமிருந்து கடிதம் வந்திருக்கு!" என்றாள் ராஜம்.

"எந்த அப்பாவிடமிருந்து...?" என்று கேட்டான் நரசிம்மன், கோபமும் மிடுக்கும் தொனிக்க.

ஆம், வீட்டில் தன் சுதந்திரத்தை நிலைநாட்டிக் கொள்ள வேண்டுமல்லவா? அதனால்தான் இவ்வளவு ஆர்ப்பாட்டம்!

ஆனால் ராஜத்துக்கு ஒன்றும் புரியவில்லை. "எந்த அப்பாவிடமிருந்து வரும்? எங்க அப்பாவிடமிருந்துதான்!" என்றாள்.

"அவருக்கு வேறு வேலை என்ன? யார் அவரைக் கடிதம் எழுதச் சொன்னது? அவர் கடிதம் எழுதவில்லையே என்று யார் இங்கு அழுதார்கள்?"

இந்த வார்த்தைகள் ராஜத்தின் மனதில் வேதனையை உண்டாக்கி விட்டன. கண்களில் கண்ணீர் அரும்பி விட்டது. "என்னமோ, தெரியாத்தனமாக மாப்பிள்ளை யாயிற்றே என்று எழுதிவிட்டார். எழுதின கடிதாசியைப் படித்துவிடுங்கள். இனிமேல் அவரை எழுத வேண்டாம் என்று சொல்லிவிடுகிறேன்!" என்று கூறிக்கொண்டே கடிதத்தைக் கொடுத்தாள்.

அன்பார்ந்த மாப்பிள்ளைக்கு, ஆசீர்வாதம். ராஜம் குளித்து நாலு மாதம் ஆகிறதென்று தெரிகிறது. எல்லாம் சுவாமி கிருபை. அவளுக்குக் காரியம் செய்யச் சிரமமாக இருக்கும் மாதங்கள். வருகிற வியாழக்கிழமையே நல்ல நாளாய் இருப்பதால் அனுப்பி வைக்கவும்.

இப்படிக்கு,

நரசிம்மனுக்குக் கடிதத்தைப் படிக்க
படிக்கச் சந்தோஷம் தாங்க முடியவில்லை
"என்ன ராஜம், எனக்குச் சொல்லவே
யில்லையே! அப்படியானால் அடுத்த வியாழ
கிழமை நீ புறப்பட்டுப் போய் விடுவாய்
என்னைத் தனியாக விட்டுவிட்டு என்
சொல்லு!" என்றான் நரசிம்மன்.

ராஜத்தின் கோபம் இன்னும் தணி
யில்லை. கண்களில் கண்ணீருடன், "போ
வேண்டியதுதானே! ஆனால் ஒரே ஒ
அற்ப ஆசை; வர வியாழக்கிழமைக்
அடுத்த நாள் வெள்ளிக்கிழமை யல்லவா
அன்று இந்தியாவுக்குச் சுதந்திரம் கிடை
கும் திருநாள், நம்மாத்திலே கொடியேற்றி
பண்டிகையாட்டம் விசேஷிதரோடே கொ
டாடணும் என்று சொன்னேனே
அதற்கு இருந்துவிட்டுப் போகிறேனே!"
என்றாள் ராஜம்.

"இதற்கு இப்படிச் சொல்வானேன்
அசடே, அவசியம், நீ அதற்கு இருந்
விட்டுத்தான் போகணும்!" என்றா
நரசிம்மன்.

ராஜத்தின் கோபம் எங்கேயோ பறந்
விட்டது. முகத்தில் மெல்லிய புன்னகை
யும் அரும்பிவிட்டது!

நரசிம்மனுக்கு ஆகஸ்ட் 15-ந் தே
தேசம் சுதந்திரம் பெற்றதில் எவ்வளவோ
சந்தோஷம். அந்தச் சுதந்திரத் திருநாளை
தம்பதிகள் இருவரும் கோலாகலமாக
கொண்டாடினார்கள்.

அதற்கு மறு நாள் சனிக்கிழமை யன்
ராஜத்தின் தகப்பனார் வந்து தம் பெண்ணை
அழைத்துக் கொண்டு போனார். நரசிம்
னுக்கும் அவன் விரும்பியபடியே சுதந்திர
கிடைத்தது!

ஆனாலும் ஏனோ தெரியவில்லை, அடுத்
சில நாட்களுக்கெல்லாம் ராஜம் மறுபடியு
தன்னை அடிமைப் படுத்தப் போகு
நன்னாளை அவன் ஆவலுடன் எதிர்பார்த்து
கொண்டிருந்தான்!





# காலக்ஷேபம்

## முக்கிய காரியம்

வந்தவர் :—என்னப்பா, பால்காரன்! மணி …ன்பது ஆகிறது. இன்னும் பால் கறக்காமல் …ட்கார்ந்திருக்கிறாயே! அந்தக் காரியமெல் …ாம் அப்புறம் செய்து கொள்ளப்படாதா?

பால்காரன் :—இல்லீங்க! ரொம்ப முக்கிய …ான காரியங்க! புதுக் கன்னுக்குட்டி ஒன்று …செய்துவிட்டு இருக்கிறேன். ஆனாலும் கறந்து …ிடுவேனுங்க!



## ஊறுகாயா!

மனைவி :— காலம்பறத்தான் வாங்கினேன், …ரம்பழம்! டஜன் இரண்டு ரூபாய்! எப்படி …ருக்கு தேவலையா?

புருஷ (இலையில் உட்கார்ந்து சாப்பிட்டுக் …கொண்டே) :—பேஷா யிருக்கிறது! கொஞ் …ம் மிளகாய்ப் பொடியும் உப்பும் எடுத் …க் கொண்டு வா! தொட்டுக் கொண்டு …சாப்பிடலாம்!



## அவன் வருத்தம்!

கோபாலன் :—அடே ராமு, உங்க அப்பா …க்குப் புஸ்தகம் வாங்க உடனே பணம் …வணும் என்று கடிதாக போட்டிருந்தாயே! …ணம் அனுப்பினாரா?

ராமு :—இல்லைடா! புஸ்தகத்தையே வாங்கி …அனுப்பித் தொலைத்து விட்டாரடா!



## நல்ல சிக்கனம்!

தம்பி :—நீ என்ன வேண்டுமானாலும் சொல் …க் கொள். நான் வரவரச் சிக்கனமாயிருக் …கிறேன் என்பது மட்டும் உனக்கு ஞாபகம் …இருக்கட்டும்!

அண்ணன் :—நீ சிக்கனமாக இருக்க இருக்க, …என் சட்டைப் பையிலே யிருக்கும் சில்லறை …யெல்லாம் குறைகிறதே!



## யோசனை சரிதான்!

வக்கீல் :—என்னுடைய 'பீஸ்" நாலாயிரம் …ரூபாய் ஆகிறது......!

கட்சிக்காரன் :—அடேயப்பா! இந்தப் …பணத்தைக் கொண்டு ஒரு வீடு கட்டிப்பிட …லாமுங்களே!

வக்கீல் :—ஆமாம்; நானும் வீடுதான் …கட்டிக்கொள்ளப் போகிறேன்!

## யாருடைய குடை?

"போன வாரம் என் குடையை இரவல் கொடுத்தேனே, அதைத் திருப்பிக் கொடுக்காமல் சும்மா இருந்துவிட்டாயே!"

"அது என் குடைதான்! நான் செய்திருந்த அடையாளம் எல்லாம் இருக்கு. அதனால் நான் கொடுக்காமல் இருந்துவிட்டேன்!"

"அட வயிற்றெரிச்சலே! குடை வேறுயாருடையதாக்கும் நினைத்துக் கொண்டு, அதற்காக நாலு நாளாய் அவன் கண்ணில் படாமல் ஒளிந்து கொண்டிருக்கிறேனே!"



## சரிதான்!

பஸ் நிரம்பி யிருந்தது. ஒரு ஸ்திரீக்கு உட்கார இடம் இல்லாமல் நிற்பதைக் கண்ட ஒருவர், சட்டென்று தம் இடத்தை விட்டு எழுந்தார். அந்த இடத்தில் நின்று கொண்டிருந்த ஆசாமி ஒருவன் அவசரமாக உட்கார்ந்து கொண்டான்.

இடம் கொடுத்தவர் :—ஐயா, நான் உமக்காக இடம் கொடுக்கவில்லை; இந்த அம்மாள் உட்காரத்தான் எழுந்திருந்தேன்!

உட்கார்ந்தவர் :— அதனால் பரவாயில்லை, ஸார்! அந்த அம்மாள் யாருமில்லை, என் சம்சாரம்தான்!



## மூளை வேண்டாமா?

டாக்டர் :—இந்த நிலைமையிலே நீர் மூளைக்கு வேலை கொடுக்கிற எந்த வேலையும் செய்யக் கூடாது.



நோயாளி :—அடேடே! இப்போ நான் ஒரு நாவல் அல்லவா எழுதிக் கொண்டிருக்கிறேன்? அது ரொம்பக் கெடுதல் இல்லையா?

டாக்டர் :—அதனால் ஒன்றும் பாதகமில்லை? நீர் தாராளமாய் எழுதலாம். மூளைக்குச் சிரமம் தரும் வேலைதான் செய்யக் கூடாது!

# உமது மனைவி ஸயன்ஸ் படித்தவளாக இருக்கமுடியுமா?



உமது வீட்டில் சமயல் செய்கிறவர்கள் சமைக்கிறவைகளில் இவ்வளவு சத்துப்பொருள்கள் தேவை என்று இடை போட்டு சமைத்தால் தானே நீங்கள் சாப்பிடும் உணவில் வேண்டிய எல்லா சத்துப் பொருள்களும் இருக்கின்றன என்று தெரிந்து கொள்ள முடியும்?

உணவுப் பொருள்களின் குறைவான சத்துக்களை சரிசெய்து தேகாரோக்யம் பெறுவதற்கு. பலம் தந்து லேசாக ஜீர்ணிக்கும் மெக்லெக்ஸ் வில்லைகளைச்சாப்பிடுதல் மிகவும் சுலபமான வழியாகும்.

ஏராளமான விட்டமின் சத்துள்ள மெக்லெக்ஸ் வில்லைகளால் எல்லாவித உணவுகளின் குறைகளை நீக்கி சமசத்துள்ளவைகளாகச்செய்து கொள்ள முடிகிறது. அத்துடன் உடலை வளர்க்கக் கூடிய போஷிப்பை அளிக்கும் சத்தான பொருள்களும் இருக்கின்றன.



**மெக்லெக்**
**நியூட்ரிமெண்ட்ஸ்**

உணவில் குறையாய் உள்ள உணவுச்சத்துக்களை அளிப்பவை

விவரமான செய்திகளுக்கு கீழ்க்கண்டவர்களுக்கு எழுதுங்கள்:

தி மெக்லெக் நியூட்ரிமென்ட்ஸ் அன் பார்மஸூடிகல்ஸ் லிட்
99-A, ஆர்மீனியன் தெரு, ஜி. டி. மதராஸ்

ADARTS MNP. 46 B. Tami

இனம்! இனம்!

15 அழகான சித்திர பின்னல் வேலை அடங்கிய

## அரிய புஸ்தகம்

பெண்மணிகளே! நீங்கள் பொறுமையுடன் அடைய வேண்டிய புஸ்தகம் இதோ இருக்கிறது

## "சித்ரா தையல் கலைமுறைகள்"




நீங்கள் பொறுமையுடன் காத்திருந்த, அற்புதமான எம்பிராய்டரி சித்திரத் தையல் புத்தகம் இதுவே. இந்த புத்தகத்தை நீங்கள் பொக்கிஷம் போன்று பத்திரப்படுத்துவீர்கள். இந்தியில் முதல் தடவையாக இதைப்போன்ற எம்பிராய்டரி தையற் புத்தகம் தமிழில் அச்சிட்டு வெளி வந்துள்ளது இதுவே. யாவருக்கும் எளிதில் விளங்கக்கூடிய முறையில் வசன நடை அமைப்பதில் மிகுந்த சிரத்தை எடுக்கப்பட்டுள்ளது; எனவே எம்பிராய்டரி சித்திரத் தையல் வேலைகளை முதன் முறையாக கற்கத் தொடங்குவோரும்கூட, ஆச்சரியப்படத்தக்க குறுகிய காலத்தில் நல்ல தேர்ச்சி அடைந்துவிடலாம்.

அழகிய 145 எம்பிராய்டரி மாதிரி படங்கள் அடங்கி இருக்கின்றன. இளைஞர் முதல் வயோதிகர் வரை ஒவ்வொருவரும் விரும்பும் அப்ளிக் வேலைப்பாடுகள், பறவைகள், பல்வேறு மிருகங்கள், யானைகள், இயற்கை காட்சிகள், பூ வேலைப்பாடுகள் முதலியவைகளைக் கொண்டது. இதில் அடங்கியுள்ள டிசைன்கள் முழுதும், தற்கால நாகரிகத்துக் கொத்தவை களாகும். மேலும் ரவிக்கைகளுக்கும், பாவாடை ஓரங்களுக்கும் போடக் கூடிய எம்புரோடி வேலையும் காட்டியிருக்கிறது. கடுதாசி கட்டுப்பாட்டின் காரணமாக 2,000 பிரதிகளே அச்சிடப்பட்டன. ஒரு வாரத்திற்குள் 1,500 பிரதிகள் விற்றுப்போய்விட்டன. 500 பிரதிகளே மீதி யுள்ளன. இந்த புஸ்தகத்தை எல்லோரும் வேண்டி பிரயோஜனப்படும்படியான நோக்கத்துடன் இன்று முதல் 10 நாள் வரை மட்டும் இந்த புஸ்தகத்தை வேண்டுவோர்களுக்கு பிரயோஜனமான 15 அழகான பின்னல் சித்திரங்கள் (Filet Crochet) அடங்கிய அரிய புஸ்தகம் இனமாகக் கொடுக்கப்படும்.

இந்த புஸ்தகம் ரெஜிஸ்டர் தபால் கூலி உள்பட ரூபாய் 3, அணா 5. இந்த தொகைக்கு 5 Shilling British Postal order நமக்கு அனுப்பினால் புஸ்தகம் இரண்டும் உடனே அனுப்புவோம். இந்த British Postal orders இந்தியாவில் எல்லா தபாலாபீஸ்களிலும் கிடைக்கும். இந்தியா Postal order ஏற்றுக் கொள்ளப்படமாட்டாது.

**X. P. PAIVA, P. O. Box 294, 77, Main Street, Colombo, CEYLON**

Edited, Printed and Published by R. Krishnamurthy at the "Kalki" Press
116-119, Sladens Garden, Poonamalle High Road, Kilpauk Madras.

